# சுவாமி அடக்கி வைக்கப் படுவார்!



## வாழப்பாடி பேட்டி

**தேசிய அளவில் பரபரப்பு ஏற்படுத்திய காங்கிரஸ் பிளவுக்குப்பின், திவாரி காங்கிரஸின் த.நா. தலைவர் வாழப்பாடி ரொம்ப பிஸியாக இருக்கிறார். காலில் சக்கரம் கட்டாத குறையாக அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருப்பவரைப் பிடித்து 'பிரிவுக்குப் பின்' நிலை பற்றிப் பேசினோம்:**

டெல்லியில் நடந்த பேரணியில் எத்தனை எம்.எல்.ஏ.க்கள் கலந்து கொண்டார்கள்? அவர்கள் கட்சித் தாவல் தடைச் சட்டப்படி பதவி இழப்பார்கள் என்று சொல்லப்படுகிறதே!

18 எம்.எல்.ஏ.க்கள் கலந்து கொண்டனர். ஒரு எம்.எல்.ஏ., 'நான் வேறு கட்சியில் சேர்ந்து விட்டேன்' என்று சொன்னால்தான் கட்சித் தாவல் தடைச் சட்டப்படி நடவடிக்கை எடுக்க முடியும். நாங்கள் காங்கிரஸ்காரர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டோம். இன்னமும் அப்படியே தொடர்கிறோம். அவ்வளவே! இந்த பயமுறுத்தல்கள் எடுபடாது.

**மறுபடி அ.தி.மு.க.வும் நரசிம்மராவ் தலைமையிலான காங்கிரஸூம் கூட்டுச் சேரும் என்று பேச்சுக்கள் அடிபடுகிறதே!**

ஜெயலலிதா, ராவ் காங்கிரஸ்காரர்களை புழுவுக்கும் கேவலமாக மதிக்கிறார். மிதிக்கிறார். ஆயினும் ராவ், ஜெயை நம்புகிறார்! இந்த நிலையில் ராவ் காங்கிரஸூம் ஜெயலலிதாவும் கூட்டு சேரும் நாளை நான் ஆவலோடு எதிர்பார்க்கிறேன்; வரவேற்கிறேன். அப்போதுதானே அங்கே மிச்சம் மீதி இருக்கும் தொண்டர்களும் எங்கள் பக்கம் வர முடியும்; வரும் தேர்தலில் ஒரு சேர அவர்களை முறியடிக்க முடியும்?

**திவாரி தலைமையில் செயல்படும் நீங்கள் தி.மு.க.வுடன் கூட்டு வைத்துக் கொள்ள இருப்பதாக பரவலாகப் பேசப்படுகிறதே!**

ஒரு வேளை மக்கள் இதை விரும்புகிறார்கள் போலிருக்கிறது. அதனால்தான் பேச்சுக்கள் அடிபடுகின்றன. ஆனால், நாங்கள் தி.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொள்வோம் என்று அறிவிக்கவில்லை. மத்திய, மாநில அரசுகளின் ஊழல் சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் போராடுவோம். வேறு கட்சிகள் போராட்டம் நடத்தினால் ஆதரவு கொடுப்போம் என்று சொன்னோம். அந்த அடிப்படையில்தான் செயல்படுகிறோம். எதிர்காலத்தில் யாரோடு கூட்டு வைத்துக் கொள்வது என்பதை தொண்டர்களும் தலைமையும் முடிவு செய்வார்கள்.

**ராஜ்யசபை தேர்தலில் உங்கள் ஆதரவு எம்.எல்.ஏ.க்கள், பொது வேட்பாளராக திருநாவுக்கரசை நிறுத்தினால் ஆதரிப்பார்களா?**

ராஜ்யசபா தேர்தலைப் பொறுத்த வரையில் பொது வேட்பாளர் என்ற பேச்சுக்கே இடமில்லை. எங்கள் ஆதரவு இல்லாவிட்டால் கூட ஒரு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் அளவுக்கு பலம் இருப்பதாக எஸ்.ஆர்.பி. சொல்லியிருக்கிறாரே! பார்க்கலாம்.

**அ.தி.மு.க.வில் வளர்க்கப்படும் காலில் விழும் கலாசாரத்தை சாடும் நீங்கள், சமீபத்தில் கவர்னர் சென்னாரெட்டி காலில் விழுந்தது குறித்து கிண்டலாக விமர்சிக்கப்படுகிறதே!**

எனக்கும் அவருக்கும் உள்ள நட்பைப் பற்றி பலருக்குத் தெரியாது. நான் எந்தப் பதவியையும் எதிர்பார்த்து அவர்காலில் விழவில்லை. அவரும் கொடுக்கும் நிலையிலில்லை. இது என்னுடைய தனிப்பட்ட விஷயம்.

**வரும் நாட்களில் தமிழக அரசியலில் என்னென்ன திருப்பங்களை எதிர்பார்க்கிறீர்கள்?**

சுவாமி அடக்கி வைக்கப்படுவார். ஆளும் கட்சியின் அராஜகம் அதிகமாகும். ஊழல் கொடிகட்டிப் பறக்கும். எதிர்க்கட்சித் தலைவர்கள் தாக்கப்படுவார்கள். அனைத்து எதிர்க்கட்சிகளும் ஒன்று சேர்ந்து போராட வேண்டிய நிலை வரும்.

சந்திப்பு: **பி.எஸ்.**

# கல்லூரிப் பறவைகள்!



• பாலாஜி

பிளஸ் டு முடித்து காலேஜுக்குள் போகும் பருவம் ஒரு முக்கியமான திருப்புமுனை. 'ஸ்கூல் சில்ட்ரனா'க இருந்தவர்கள் 'காலேஜ் ஸ்டூடன்ட் களாகப்' பிரமோஷன் பெறு கிறார்கள். இந்தச் சமயத்தில் இளைஞர்கள் எப்படி உணர்கிறார்கள்? இறக்கை முளைத்து விட்டது போல் ஒரு சுதந்திர உணர்வு தோன்றவில்லையா...? பிளஸ் டு பரீட்சை முடிவு கள் வந்து விட்ட நிலையில் அட்மிஷன் கவலையில் இருந்த மாணவ - மாணவி கள் சிலரை அழைத்து உரையாடச் சொன்னோம். அவர்களும் தற்காலிகமாய் அட்மிஷன் எண்ணத்தை மறந்து விட்டு காலேஜ் பிரவேச உணர்வுகள் பற்றிப் பேசினார்கள். சிரிப்பும் சீண் டலும் கொப்பளித்த அந்த உரையாடலின் சில பகுதிகள் :

**எஸ். வித்யா :** எனக்கென்னவோ ஸ்கூல்லயே இருந்துட்டா பரவால்லை போல் தோணுது. காலேஜ் போனா பொறுப்பு அதிகமாயிடுது...

**பாலாஜி :** நாமேதான் படிச்சுக்கணும்; லெக்சரர்ஸ் விரட்டி விரட்டி படிக்க வைக்க மாட்டாங்கன்னு சொல்றாங்க. ஆனா அதுவே எவ்வளவு பெரிய சுதந்திரம்! எங்க ஸ்கூல்ல போன வருஷம் முழுக்க ஒரு ஞாயிற்றுக் கிழமை விடாம டெஸ்ட் வைச்சாங்க...

**கார்த்திக் :** ஆமாம். பயங்கர ஸ்ட்ரிக்ட் வேற. ஒரு டெஸ்ட் கூட கட் அடிக்க முடியாது. மார்க்கு குறைச்சு வாங்கினால் மாஸ்டர் போட்டு நிமிர்த்திடு வார்.

**எஸ். வித்யா :** என்ன! அடிப்பாங்களா? எங்க ஸ்கூல்ல நாங்க டீச்சர்களோட ரொம்ப ஃப்ரெண்ட் லியா இருப்போம். அதே நேரத்துல அவங்க ஸ்ட்ரிக்டாவும் இருப்பாங்க.

**கார்த்திக் :** எங்களுக்கு அந்த மாதிரி அதிர்ஷ்டமெல்லாம் இல்லை...

**பாலாஜி :** அதனாலேயே நாங்க காலேஜ் போகறதை ரொம்ப ஆவலா எதிர்பார்க்கறோம்... அதுவும் புதுப் புது நண்பர்கள் கிடைப்பாங் கன்றது ரொம்ப பெரிய விஷயம். இரண்டு



• எஸ். வித்யா



வருஷமா ஸ்கூல் - வீடு - ஸ்கூல்ன்னே இருந்ததுல எங்களுக்கு ஏக்கமே வந்துடுச்சு.

**கார்த்திக் :** அதுவும் பெண்களோட (கிளாஸ்மேட்ஸ்தான்) பேசினாலே பெரிய பாவம் என்கிற மாதிரி தடை பண்ணி வைச்சாங்க.

**பாலாஜி :** அப்படியே கிளாஸ் முடிஞ்ச பிறகு பேசினால் கூட திட்டி, அவமானப்படுத்துவாங்க.

**எஸ். வித்யா :** காலேஜ்ல அப்படி யெல்லாம் நிச்சயம் இருக்காது. இன் னும் சொல்லப் போனா நாமாவே வரம்பு மீறாம நடந்துக்க வேண்டி யிருக்கும்.

**நிரஞ்சன் :** ஐயோ! ஒரு கோ-எட் காலேஜ்ல பையன் களையும் பெண்களையும் தனித்தனியா உட்கார வைக்கறாங்க தெரியுமா?

**குரு :** ஆமாம்! அந்த காலேஜ் பஸ்ல கூட லேடீஸ் - ஜென்ட்ஸ் சீட்டுக்கிடை யில முள்ளுக் கம்பி போட்டிருக்காங் களாம்... காலேஜ் நடைபாதைகளையும் ஆண்களுக்கு, பெண்களுக்குன்னு பிரிச்சு வைச்சிருக்காங்களாம்.

**பிரபா :** கோ-எட் ஸ்கூல்ல ஆரோக் கியமான ஃப்ரெண்ட்ஷிப்போட இருந்துட்டு இப்படி ஒரு காலேஜுக் குப் போனா அவ்வளவுதான்!

**எஸ். வித்யா :** இந்த மாதிரி கட்டுப்படுத்தறதுனாலதான் சில ஸ்டூடன்ஸ் கட் அடிச்சுட்டு உணர் சுத்தறாங்க போலிருக்கு... ஸ்கூல்ல ரொம்ப கட்டுப்பாடா இருந்துட்டு காலேஜ் போய் கொஞ்சம் சுதந்திரம் கிடைச்சதுமே 'கட்' அடிக்கத் தோணும்.

**நிரஞ்சன் :** அதெல்லாம் ஆரம்பத்தில் கொஞ்சம் த்ரில்லா இருக்கலாம். ஆனால் போகப் போக நமக்கே சீரியஸ்னஸ் வந் துடும். ஒழுங்காப் படிச்சு மார்க் வாங் கணுமே.

**எச். வித்யா :** காலேஜுக்கு யூனி ஃபார்ம் கிடையாதுன்றதே பெரிய விஷயமில்லையா...?

**எஸ். வித்யா :** எனக்கென்னவோ யூனிஃபார்ம்தான் ஒரு dignity தர மாதிரி யிருக்கு.

**பிரபா :** இந்தச் சமயத்துலதான் நாம நியாயமா புது ட்ரெஸ் கேட்டு வாங்கிக்க முடி யும்.

**எச். வித்யா :** பையன் களுக்கு இந்த விஷயம் பெரிசா தெரியாது. அவங் களுக்கு இரண்டு ஜீன்ஸ், நாலு டீ ஷர்ட் இருந்தா திருப்தியாயிடுவாங்க.

**குரு :** ஏன், பெண்கள் கூடத்தான் ஜீன்ஸ், டீ ஷர்ட் போடறாங்க.


• குரு


• நிரஞ்சன்


• கார்த்திக்


• எச். வித்யா

"கொசுத் தொல்லை அதிகமா இருக்கற இடத்துல நம்ம கூட்டத்தை வச்சுக்கலாம்..."

"ஏன் தலைவரே...?"

"அப்பதான் கைத்தட்டல் அதிகமாக் கிடைக்கும்!"

- எஸ். எஸ். பூங்கதிர்



பிரபா : ஆனா, நமக்கு ஜீன்ஸ், டீ ஷர்ட் மட்டும் போதாதே. ஜீன்ஸ் பிளஸ் சல்வார் பிளஸ் புடைவைன்னு லிஸ்டு நீளமாகும்.

பாலாஜி : எந்த புது டிரெஸ்ஸானாலும் வாங்குற மார்க்கைப் பொறுத்துத்தான் கிடைக்கும்....! (சிரிப்பு)

பிரபா : என்னை மாதிரி பதினாலு வருஷம் ஒரே ஸ்கூல்ல படிச்சவங்களுக்கு எப்படியிருந்தாலும் காலேஜ் ஒரு புது உலகம்தான். என்னுடைய ஒரே கவலை, ஸ்கூல்ல எங்க ஃப்ரெண்ட்ஸ் க்ருப் இயல்பா அமைஞ்ச மாதிரி காலேஜ்லயும் அமையணுமேன்னு தான்.

எச். வித்யா : புது உலகத்தை நினைச்சா கொஞ்சம் பிரமிப்பா இருக்கு.

நிரஞ்சன் : எங்களுக்கு அதெல்லாம் பிராப்ளமா தெரியலை.

குரு : எங்களுக்கு ஃப்ரெண்ட்ஸ் பண்ணிக்கறதும் பிரச்னை கிடையாது. நேரா போய் ஹாய் சொல்லி கை குலுக்கிடுவோம்.

பிரபா : ஏன் பெண்களுக்கு மட்டும் அந்த மாதிரி முடியறதில்லைன்னு தெரியலை. ஒருவேளை நாங்க ரொம்ப சென்டிமென்டலா இருக்கிறது காரணமாயிருக்கலாம்.

நிரஞ்சன் : நீங்க கொஞ்சம் பழகிட்டு, பழகினவங்களைப் புரிஞ்சுக்க முடியுதான்னு பார்த்து அப்புறம் ஃப்ரென்ட் ஆகறீங்க. நாங்க ஃப்ரென்ட் ஆயிட்டு அவங்க எப்படி இருந்தாலும் புரிஞ்சுக்கிட்டு ஒத்துப் போயிட றோம்!

எஸ். வித்யா : ஆனால் நீங்கதான் அதிகமா 'ராகிங்' அனுபவிப்பீங்க. லேடீஸ் காலேஜ்ல அவ்வளவா இருக்காது.

நிரஞ்சன் : அதெல்லாம் கூல்...

குரு : ஆமாம். அதையும் ஒரு புது அனுபவமா - காஷுவலா எடுத்துக்க வேண்டியது தான்.

கார்த்திக் : அது அவ்வளவு சுலபமில்ல. ராகிங் பண்றதும் கொஞ்சம் டீசன்டா இருந்தால் பரவாயில்லை.

பாலாஜி : ஆமாம். நான் அப்ளிகேஷன் ஃபார்ம் வாங்கப் போன போதே ரொம்ப கொடுமை பண்ணிட்டாங்க. இரண்டு சிகரெட்டை வாயில் வைச்சு கையைப் பின்னால கட்டிக்கிட்டு அந்த காலேஜ் உள்ள தெரு முழுக்க மேலும் கீழும் நடக்க வைச்சாங்க.

கார்த்திக் : இன்னொரு காலேஜ்ல வாசல் கேட்டிலிருந்து ஆபீஸ் ரூம் வரைக்கும் கோழி பிடிக்கற மாதிரி கற்பனை பண்ணிக்கிட்டே குனிஞ்சு ஓட வைச்சாங்க. அப்புறம் நம்மகிட்டே இருக்கற காசை வேற பிடுங்கிகிடறாங்க... எல்லா பேரன்ட்ஸுமே பணத்துக்குக் கஷ்டப்படற நேரம் இது. இப்படி நடந்தா என்ன செய்யறது.

பாலாஜி : எல்லாத்தையும் ஒரே காரணத்துக்காகத்தான் பொறுத்துக்கிட்டுப் போறோம்...

குரு : நம்ம எதிர்காலமே நாம் காலேஜ்ல எப்படி படிச்சு மார்க்கெடுக்கறோம்ங்கறதைப் பொறுத்திருக்கு.

பாலாஜி : ஒரு better life-க்காக ஒரு வேலியை விட்டு வெளியே வரோம். ரொம்ப நாளா நாம பார்க்கணும்னு விரும்பின exhibition நமக்காகக் காத்துக்கிட்டிருக்கு. அதே சமயம் நம்ம எதிர்காலத்தை அமைச்சுக்கறதும் முழுசா நம்ம கையிலதான் இருக்கு. அதனாலேயே freedom பயமுறுத்துது.

எஸ். வித்யா : வேறவிதமாச் சொல்லணும்னா இனிமே வாழ்க்கைல உரிச்ச வாழைப்பழ சௌகரியங்களெல்லாம் கிடையாது...

பாலாஜி : ஆமாம்! வாழைக்காய்தான்! அதை நாம்தான் கவனமா பதமா பழுக்க வைச்சுக்கணும், அப்புறம் பயன்படுத்திக்கணும்!

திடீரென்று சீரியஸாகியிருந்த இளைஞர்களுக்கு, பாலாஜியின் இந்த உவமை கலகலப்பூட்ட, எல்லோருமே இயல்பான உற்சாகத்தை மீட்டுக் கொண்டார்கள்.

தொகுப்பு : **மலர்**

மேலட்டை வண்ணப்படம், படங்கள் :
**கேமரா திருஞானம்**

# ஒன், டூ, த்ரீ... எல்லாமே மோசடி!

"கணவன் வேலைக்குச் சென்ற பின், வீட்டில் தனியாய் இருக்கும் பெண்களிடம் நைஸாகப் பேசி, பணத்துக்கோ, தங்க நகைகளுக்கோ பதிலாக, போலி தங்கத்தைக் கொடுத்து ஏமாற்றும் மோசடி பற்றி எனக்கு நிறைய புகார்கள் வருகின்றன'' என்கிறார் குலோத்துங்க சோழன். 'டிடெக்டிவ் இன்டர்நேஷனல்' என்ற தனியார் துப்பறியும் நிறுவனத்தை இவர் நடத்தி வருகிறார்.

நாம் அவரைச் சந்தித்தபோது, ஒரு சுருக்குப்பையை நம் முன் எடுத்துப் போட்டு, சுருக்கை விலக்கி, கவிழ்த்தார். கண்ணைப் பறிக்கும் பொன்னிற மணிகள். சிறிய சைஸ். நூலில் கோத்து, கழுத்தில் அணிந்து கொண்டால், எந்தப் பெண்ணும், 'எங்கே வாங் கினீங்க? எவ்வளவு ஆச்சு?' என்று நிச்சயம் விசாரிப்பார்.

''போலி... இது நூற்றுக்கு நூறு போலி!'' என்றார் கு. சோழன். ''வீட்டில் தனியாய் இருக்கும் பெண்மணிகளைக் குறிவைத்துத் தேர்ந்தெடுத்து, அவர்களைச் சாதுரியமாய் அணுகிப் பேசி, 'எங்கள் சொந்த ஊரில், கிணறு தோண்டும் போது கிடைத்த புதையல், வெளியே தெரிந்தால் அரசாங்கம் எடுத்துக் கொண்டு விடும். எனவே ரகசியமாய் விற்கிறேன்' என்று கதை அளப்பார்கள். மார்க்கெட் விலையை விட மிகக் குறைவான விலையில், தருவதாய் ஆசை காட்டுவார்கள். நிஜத் தங்கத் துண்டு ஒன்றையும் தந்து விட்டு, வேண்டுமானால், இதைச் சோதித்துப் பார்த்து விட்டு, நம்பிக்கை ஏற்பட்டால் வாங்குங்கள்' என்று நம்பிக்கையூட்டும் வண்ணம் பேசுவார்கள்.

''இந்தப் பேச்சில் மயங்கி விடும் பெண்ணிடம் போலி தங்கத்தைப் பணத்துக்கு விற்பார்கள். அல்லது இரண்டு பவுன் நிஜ தங்க நகையை வாங்கிக் கொண்டு, நாலு 'பவுனு'க்குப் போலியைத் தலையில் கட்டி விடுவார்கள்.

''இவர்களுக்குப் போலி தங்கம் தயாரித்துக் கொடுப்பதற்கென்றே சிலர் இருக்கிறார்கள். போலீசிலும், அரசாங்கத்திலும் அதிக செல்வாக்கு இருப்பவர்களது ஆதரவுடன் இந்த மோசடிக் கும்பல் செயல்படுகிறது என்பதில் எனக்கு சந்தேகமே இல்லை.

"அடுத்தது, ஒருவிதமான பிளாக் மெயில் டெக்னிக். பத்து, பன்னிரண்டு வயது பெண்ணை அழைத்துக் கொண்டு வந்து, வீட்டோடு ஆள் தேவைப்படும் வீட்டில் வேலைக்குச் சேர்த்து விடுவார்கள்.

''ஒருநாள், திடீரென அந்த வீட்டிலிருந்து, வேலைக்காரப் பெண் காணாமல் போய் விடுவாள். சில நாட்கள் கழித்து, 'உறவுக்காரர் திருமணம். இரண்டு நாள், எங்க பெண்ணை ஊருக்கு அழைச்சிக் கிட்டுப் போறோம்' என்று வருவார்கள்.

''பெண் காணாமல் போனதை வீட்டுக்காரர் தயங்கித் தயங்கித் தெரிவிப்பார். பெண்ணுக்குச் சொந்தக்காரர்கள், மிக சாதுர்யமாய், வீட்டுக்காரர்தான் பெண் காணாமல் போனதற்குக் காரணம் என்று மிகவும் பவ்யமான முறையில் குற்றம் சாட்டுவார்.

'சொந்தக்காரர் ஒருவர் திருநெல்வேலியில் இருக்கிறார். அங்கே போய் தேடிப் பார்க்கிறோம். நாலாயிரம் ரூபாய் செலவாகும்' என்று கூறி பணம் வாங்கிக் கொள்ளுவார். இதே போல திரும்பத் திரும்ப வந்து பத்தாயிரம் வரை கறந்ததும், மறைந்து விடுவார்!

''ஆனால், காணாமல் போன பெண், திட்டமிட்டபடி, வேறு ஒரு இடத்தில் இதே பிளாக்மெயிலின் முதல் கட்டத்தினை வெற்றிகரமாய்ச் செயல்படுத்திக் கொண்டிருப்பாள்!

''இந்த மாதிரி மோசடி குறித்து வந்த ஒரு புகாரைத் தீவிரமாய் புலன் விசாரித்துப் பார்த்ததில், ஒரு குறிப்பிட்ட கிராமத்தில் இருப்பவர்களின் பிரதான தொழில் இது என்று கண்டுபிடித்தோம். போலீஸில் புகார் செய்தோம். ஆனால் அவர்கள் கண்டு கொள்ளவில்லை என்பது வேதனைக்குரியது.''

சந்திப்பு :

**எஸ். சந்திரமௌலி**



• குலோத்துங்கசோழன்




1995 ஜூன் 11
யுவ வைகாசி 28
மலர் : 53
இதழ் : 45


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



## தமிழகத்துக்கே தலைகுனிவு!

ஆசைக்கு இணங்க மறுத்த இளம் கர்ப்பிணிப் பெண்ணைக் கற்பழித்த குற்றம் தொடர்பாக இரண்டு போலீஸ்காரர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். ரோந்துப் பணிக்கான ஜீப்பில் ஏறி, தப்பியோட முயன்ற பெண்ணைத் துரத்த, ஒரு குழந்தை மீது மூர்க்கமாக ஏற்றிக் கொன்றிருக்கிறார்கள்.

டி.ஜி.பி.யிடம் புகார் செய்ததன் பேரில் விசாரணை நடத்தப்பட்டு குழந்தை ஜீப்பினால் கொல்லப்பட்டது உறுதியாகியிருக்கிறது. மேலும் தீவிர விசாரணை நடக்கிறது.

காவல் துறையின் கேவலமான சீரழிவுக்கு இந்த நிகழ்ச்சி மற்றும் ஒரு சான்று.

சம்பவத்தைக் கண்டித்து அரசுத் தரப்பிலோ காவல் துறை தரப்பிலோ ஒரு சொல் கூட வெளியாகவில்லை.

தமிழகத்தில் பெண்களுக்கு மதிப்பும் பாதுகாப்பும் எந்த லட்சணத்தில் இருக்கிறது என்பதையே இந்த நிகழ்ச்சியும் அதைத் தொடரும் மௌனமும் எடுத்துக் காட்டுகின்றன.

மேல்மட்டத்தில் அதிகாரிகளை மாற்றுவதால் மட்டுமே காவல்துறை சீரடையாது. ஆயுத பலமும் வாகன வசதியும் தருவதால் மட்டுமே அது மேன்மையடையாது. காவல் துறையில் பணியாற்றுபவர்கள், அதுவொரு மாதாந்திரச் சம்பளத்துக்கான வேலைதான் என்கிற மனோநிலையில் இருக்கக் கூடாது. தாங்கள் சமூகத்தின்




பாதுகாவலர்கள் என்கிற உன்னத நிலையிலிருந்து செயல்பட வேண்டும். இதுவொன்றும் பெரிய விஷயமல்ல; ஏற்கெனவே பல கமிஷன் அறிக்கைகள் பரிந்துரைத்துள்ள சீர்திருத்தங்களைச் செய்ய ஆரம்பித்தாலே போதும், காவல் துறை கண்ணியத்துறையாக நிச்சயமாக உயர்ந்துவிடும்.

## அமோக வெற்றி; அதிலும் ஒரு பாடம்!

நாளொரு சண்டை, பொழுதொரு பிளவு என்று காங்கிரஸ் சீரழிந்து கொண்டிருக்கும் வேளையில் இடைத் தேர்தல் முடிவுகள் வெளியாகியுள்ளன. பதின்மூன்று மாநிலங்களில், இருபத்தாறு தொகுதிகளில் நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸ் பத்து இடங்களைக் கைப்பற்றியிருக்கிறது. அர்ஜுன் - திவாரி பிளவுக்குப் பிறகும் இப்படியொரு வெற்றி என்பது குறிப்பிடத்தக்க விஷயம்.

திரூரங்காடியில் மாபெரும் வெற்றி பெற்றிருக்கிறார் ஏ. கே. ஆன்டனி. இது நாள்வரை முஸ்லிம் உறுப்பினர்களே தேர்ந்தெடுக்கப்பட்ட அத்தொகுதியில், ஒரு முஸ்லிம் அல்லாதார் முதன் முறையாக சட்டமன்ற உறுப்பினராகியிருக்கிறார்.

ஆன்டனி எளிமைக்கும் நேர்மைக்கும் பெயர் பெற்றவர். மும்முனைப் போட்டியில், தமக்கு அடுத்தபடியாக அதிக வோட்டுப் பெற்றுள்ள எல்.டி.எஃப் வேட்பாளரை 22,269 வாக்குகள் வித்தியாசத்தில் தோற்கடித்திருக்கிறார். எனவே இந்த வாக்களிப்பு எதிர்க்கட்சிகளுக்கு எதிரான வாக்களிப்பு என்று கொள்ள முடியாது.




மக்கள், பேதங்களை மறந்து நேர்மையை ஆதரிக்கத் தயாராயிருக்கிறார்கள் என்பதைத்தான் ஆன்டனியின் வெற்றி சுட்டிக்காட்டுகிறது.

ஆனால் அரசியல்வாதிகள் தங்களுக்கிடையே உள்ள பேதங்களை மறக்கத் தயாராயில்லை.

ஆன்டனியும் இதர காங்கிரஸ் வேட்பாளர்களும் எந்த கைச்சின்னத்திற்கு வோட்டுப் பெற்று ஜெயித்தார்களோ, அந்த சின்னத்தின் உரிமை குறித்தே இன்று காங்கிரஸில் சண்டை நடக்கிறது.

பவார், சோனியாவைச் சந்தித்து சமாதானத்துக்கு முயற்சி செய்கிறார். அர்ஜுன் சிங், திவாரி அசைந்து கொடுப்பதாக இல்லை. அவர்கள் பிரிவிலேயே மேலும் பிளவுகள். கருணாகரனோ, 'இனி அர்ஜுன் பிரிவுடன் சமரசமே செய்ய முடியாது' என்று அடித்துச் சொல்கிறார். அயல்நாடு சென்றுள்ள குடியரசுத் தலைவர் திரும்பிய பிறகு பிரதமர் தமது அமைச்சரவையிலும் கட்சி கமிட்டியிலும் பெரிய மாற்றங்கள் செய்யப் போவதாகப் பேச்சு.

பிரதமரான புதிதில் 'கட்சித் தலைமையைச் சீக்கிரமே வேறொருவர் பொறுப்புக்கு விடுவேன்' என்று நரசிம்மராவ் சொன்னார். அதைச் செய்யாமல் இப்போது கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் என்கிற கதையாகச் செயல்படுகிறார்.

பொதுத் தேர்தல்களில் கைச்சின்னத்தை மக்கள் ஆதரிக்க வேண்டுமானால் சுயநலமற்ற தலைமையின் கீழ் காங்கிரஸ் ஒருங்கிணைய வேண்டும். இதைத்தான் இடைத் தேர்தல் முடிவுகளும் மே. வங்கத்தில் நடைபெற்ற நகராட்சித் தேர்தல் முடிவுகளும் தெளிவாக உணர்த்துகின்றன.

# சின்னத் திரை முருகன்!


• திருமுருகன்

"சொந்த ஊர் காரைக்குடி. என் பத்தேழாம் வருஷம் மெட்ராஸ் வந்து ஃபிலிம் இன்ஸ்டிடியூட்ல சேர்ந்தேன். '91ல தங்கப் பதக்கம் வாங்கினேன்..."

- இப்படி மூன்றே வரியில் தமது நாலு வருட உழைப்பைச் சுருக்கிச் சொல்லி விடுகிறார் திருமுருகன். ஆனால் அவர் அந்த காலக்கட்டத்தில் எவ்வளவு ஆர்வத்துடனும் விழிப்புடனும் கற்றிருக்கிறார் என்பது இன்று அவருடைய சின்னத்திரை படைப்புகளைப் பார்க்கும்போது புரியும்.

குறைந்த அளவு டயலாக்குகளுடன், பட்டு கத்தரிக்கது போல் காட்சி மாற்றங்களுடன் இருபது நிமிடத்தில் மனசை தைக்கும் 'சின்னத் திரைக் கதைகள்' நிகழ்ச்சியின் டைரக்டர் எம். திருமுருகன்.

பெரிய தலைகள் போட்டி போடும் ஜெ. ஜெ. டீ.வியில் சீரியல் வாய்ப்பு பெற்ற Under - thirty! திறமைக்கு வாய்ப்பில்லை என்று யார் சொன்னது!

நேரில் பார்ப்பதற்கு பந்தாவெல்லாம் இல்லாத சராசரி இளைஞராகத் தெரிகிறார். இவருக்கு வந்த முதல் பாராட்டு கே.பியிடமிருந்து தான்! இன்ஸ்டிடியூட்டில் படிக்கையில் இவர் எடுத்த 'ஏஞ்சல்' என்ற கதையை ரசித்து விட்டுப் பாராட்டினாராம் இயக்குநர் கே.பி.

"உங்கள் மானசீக குரு...?"

"டைரக்டர் மகேந்திரன்தான்" என்கிறார் திருமுருகன். சொல்லும் போதே கண்கள் விரிந்து பிரகாசமாகின்றன. "அவரோட ஒன்றரை வருஷம் பழகியிருக்கேன். எக்கச்சக்கமா கற்றுக்கொள்ள முடிஞ்சது. முக்கியமா மனித உறவுகள். அதைச் சுத்தி பின்னியிருக்கிற உணர்வுகள் - இதையெல்லாம் வெளியே கொண்டு வர மகேந்திரன் சார்தான் கத்துக் கொடுத்தார்."

"வேறு எந்த டைரக்டர்களின் பாணி பிடிக்கும்...?"

"ஃபாஸில், பிரியதர்ஷன், எல்லாருக்கும் பிடிச்ச கே. பாலசந்தர் மற்றும் 'முந்தானை முடிச்சு'க்கு முந்தைய பாக்யராஜ்..."

சன் டீ.விக்காக 'பெண் மனம்' என்ற சீரியல் தயாரித்தார் திருமுருகன். ஏதோ பிரச்னை காரணமாக அது கைவிடப்பட்டது. ஆனால் 'பெண் மனம்' சீரியலின் 'பைலட்' பார்த்த ஜெ. ஜெ. டீவிக்காரர்கள் அதை 'கபால்' என்று பிடித்துக் கொண்டார்கள். இப்போது எட்டு கதைகளுக்கு மேல் ஒளிபரப்பாகி விட்டன. சின்னத் திரைக்கதை, வசனம், இயக்கம் திருமுருகன்.

"இந்த நிகழ்ச்சிக்கு வெள்ளி இரவு எட்டரை - ஒன்பது என நேரம் ஒதுக்கித் தந்தார்கள். முதலில் தயங்கினேன். 'ஒளியும் ஒலியும்' முடிந்து ஒன்பது மணி சினிமாவுக்கு முன் எல்லோரும் சாப்பிடப் போகும் 'gap time' என்று பயந்தேன். ஆனால் நிகழ்ச்சி 'கிளிக்' ஆயிடுச்சு..."

இப்போது ஜெ. ஜெ. யில் மேலும் 13 வாரங்களுக்குச் சின்னத் திரைக் கதைகள் தயாரித்துத் தரச் சொல்லியிருக்கிறார்களாம்.

"டீ.வி.யில்தான் வித்தியாசமான விஷயங்களை, கருத்துக்களைச் சொல்ல முடியுது. சினிமால முடியுமான்னு தெரியலை..."

இப்போதைக்கு இப்படிச் சொல்லும் திருமுருகனைப் பெரிய திரை சீக்கிரமே அழைத்துக் கொள்ளும் என்பதற்கான அறிகுறிகள் ஆஜர்!

**- உல்லாசப்பறவை**

• படப்பிடிப்பில்....



# என் கடவுளுக்கு நைவேத்தியம் காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.
- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷ மடைந்து இஷ்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.
- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹ்மைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

---

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

---

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

நெ. 24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு, சென்னை - 20

போன் : 4915662 ; 4914213

Ad-Ventures

# Kalki Shopping Page



**Krishna Everywhere**

## ஸ்ரீ கிருஷ்ணா கட்பீஸ் கலெக்ஷன் (பி) லிமிடெட்

நாங்கள் தயாரிக்கும் சூட்டிங், சர்டிங், கட்பீஸ், சேலைகள், மாட்சிங் பிளவுஸ், பள்ளி-அலுவலக யூனிஃபாம்கள் மொத்த மாகவும், சில்லரையாகவும், நியாயமான விலைக்குக் கிடைக்கும்.

**Also Available Banians & Briefs**

**59, குடோன் தெரு,**
**பூக்கடை போலீஸ் நிலையம் எதிரில்,**
**சென்னை - 600 001.**

எங்கள் கம்பெனிக்கு வேறு கிளைகள் கிடையாது.

---

## மூலிகைப் பொடிகள் மற்றும் காந்த சிகிச்சை கருவிகள்

உயிருள்ள, தெய்வீக, பின்விளைவற்ற இயற்கை மூலிகைகளான அருகம்புல், வல்லாரை, தூதுவளை, துளசி, சிரியாநங்கை, சிறுகுறிஞ்சான், கடுக்காய், மகாவில்வம், ஓரிதழ் தாமரை, இன்னும் பல மூலிகைகளைக் கொண்டு - சர்க்கரை, அலர்ஜி, சளி, மூட்டுவலி, மாணவர்கள் ஞாபக சக்திக் குறைவு, அல்சர், ஆட்டா, இருதயவலி, கல் அடைப்பு, தோல் வியாதிகள், பூச்சிக்கடிகள், தலைமுடி கொட்டுதல், கர்ப்பப்பைக் குறைகள், உடல் பருமன், கிட்னி இயக்கம் செய்யாமை, கண் கோளாறுகள் போன்ற எல்லா வியாதிகளுக்கு நேரில் அணுகவும்.

காந்த சிகிச்சைக் கருவிகளான உயர் சக்தி, மத்திய சக்தி, குறைந்த சக்தி காந்தங்கள் வயிறு குறைப்பு, கழுத்து, மூட்டு வலி, தலைவலி, இடுப்பு வலி, காந்த பட்டைகள், காந்தக் கண்ணாடி முதலியவை கிடைக்கும்.

**SAKTHI NATURE CURE RESEARCH AND SERVICE CENTRE,**
**1, YMCA, Building, Royapettah,**
**Madras - 600 014.**
**Phone : 831141**

IMPCOPS மருந்துகள் கிடைக்கும்.
மருத்துவரை காலை 10 மணி முதல் இரவு 9 மணி வரை, நேரில் சந்திக்கலாம்.

---

ஸ்ரீராமபிரானுக்குப் பாலம் அமைக்க சின்னஞ்சிறு அணிலும் மணல் சுமந்தது.
உங்கள் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பாலம் அமைக்க நாங்களும் உதவ முடியும்

## நடராஜ் ஃபைனான்ஸ்

புத்தாண்டு சலுகை (இன்னும் சில நாட்களே)

மினிமம் டெபாசிட் ரூ. 10,000 ☐ காலம் 12 மாதங்கள்

**சிறப்புப் பரிசு : 1 கிராம் தங்கக் காசு**

வழக்கமான பரிசு 4% + 1% பென்ஷனர்ஸ்

6 மாதம் | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம்

☐ உடனுக்குடன் ரினிவல் வசதி ☐ ரினிவலுக்கும் பரிசு ☐ அசலுக்கும் வட்டிக்கும் 'செக்'

☐ 36 மாதங்களுக்கு ரூ. 12,000 டெபாஸிட் செய்து 3 சவரன் தங்கம் பெறும் லாபகர திட்டம்

☐ 3 வருடத்தில் இரட்டிப்பாகும் டெபாசிட் திட்டம் ☐ பண்ணை வீடு திட்டம்

☐ சீட்டு குரூப்பில் கடன் வசதி

பசுமை குலுங்கும் பண்ணை வீடு தயாராகிறது. மாதம் ரூ. 500 மற்றும் ரூ. 1000. காஞ்சிபுரத்துக்கு அருகே. பெங்களூர் நெடுஞ்சாலையை ஒட்டி விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் : (சர்வே நீ. 444/1, 453/3, 461/2)




**Phone : 4342098, 4840150**

**NATARAJ FINANCE & INVESTMENTS**
**NATARAJ CHITS (TAMILNADU) PVT LTD.,**
**NATARAJ ESTATES–FARM HOUSE PROMOTERS**
"Shanthi Complex", 3rd Floor, 26-Ranganathan St.,
T. Nagar, Madras-600 017. B.O. KANCHEEPURAM-1.

★ சீட்டுநிதி ★ ஆயில் மில்ஸ் ★ எக்ஸ்போர்ட்ஸ் ★ பண்ணைவீடு ★ பதிப்பகம் ★

adchoice

# தலை போகிற வேலை!

போட்டோ வெட்டி ஒட்டுகிற சமாசாரம் மாநில அளவில் பிரபலமாகியிருக்கிற வேளையில் நாம் மட்டும் சும்மா இருந்தால் எப்படி?

இங்கே உள்ள படங்களில் சில தலைகள் மட்டும் இடம் மாறி இருக்கின்றன. கொஞ்சம் தலையைப் பிய்த்துக்கொண்டு, எந்த உடம்புக்கு எந்தத் தலை என்று கண்டுபிடிக்க முடிகிறதா பாருங்கள். or, 50 ம் பக்கம் பாருங்கள்!











# இல்லம் இனிய இல்லம் அது காசி பில்டர்ஸ் வழங்கும் சொந்த இல்லம்!

**We accept Fixed Deposits at the rate of 24%**

**காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின்** வெற்றிகரமான 16-வது குலுக்கல் வருகிற 25.06.95 அன்று நடைபெற உள்ளது. **"காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீம்"** திட்டத்தில் ரூ. 1,500/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி 300 சதுரடிகள் முதல் 1000 சதுரடிகள் வரை உள்ள வீட்டினை பதிவு செய்யும் உறுப்பினர்களுக்கு 30.06.95 வரை முதல் தவணைத் தொகையில் 50% சிறப்பு தள்ளுபடி வழங்கப்படும்.

## சுபமங்களா திட்டம் :

இத் திட்டத்தில் ரூ. 10,000/- மட்டுமே முன்பணமாகச் செலுத்தி சொந்த வீடு பெறலாம். மீதமுள்ள தொகைக்கு நாங்களே கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் 30.06.95 வரையில் வீடு பதிவு செய்பவர்களுக்கு சிறப்புத் தள்ளுபடியும், ரூ. 5,000/- ரொக்கத் தள்ளுபடியும் வழங்கப்படும்.

## வீடு கிடைக்கும் இடங்கள் :

சென்னை கே.கே. நகர் (மேற்கு), விருகம்பாக்கம், வடபழனி, சாலிகிராமம், போரூர், நங்கநல்லூர், வளசரவாக்கம், கோடம்பாக்கம் (ரெங்கராஜபுரம் மெயின் ரோடு) ஆகிய இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

## வைப்பு நிதி திட்டம் :

இத் திட்டத்தில் முதலீடு செய்பவர்களுக்கு 24% வட்டியுடன் 2% முதல் 4% வரை ஊக்கத் தொகையும் வழங்கப்படும். மேலும் எங்களது கூட்டு வட்டி வைப்பு நிதியில் தாங்கள் செய்யும் முதலீடு 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

---

தங்கள் நிறுவனத்தின் வைப்பு நிதித் திட்டத்தில் சேர விரும்புகிறேன். இது பற்றிய விவரம் அறிந்து கொள்வதற்கு தங்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதியை கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

பெயர் : திரு/திருமதி ..............................................

முகவரி : ..............................................

..............................................

பின்கோடு : ....................

கையொப்பம்

---

*மேலும் விவரங்களுக்கு :*


**காசி பில்டர்ஸ் மற்றும்**
**காசி ஹவுஸிங் & டெவலப்மெண்ட் லிமிடெட்**
காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை,
அசோக் நகர், சென்னை - 600 083.
போன் : 4822206, 4821969, 4825606, 4825506 FAX : 044-4822206
கிளை அலுவலகம் : நெ. 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை,
சென்னை - 600 015, போன் : 456464


குறிப்பு : வாடிக்கையாளர்கள் எங்களது வைப்பு நிதியில் முதலீடு செய்ய விரும்புவோர் மேற்கண்ட கூப்பனை பூர்த்தி செய்து கீழ்க்கண்ட எங்களது முகவரிக்கு அனுப்பி வைப்பீர்களேயானால் எங்கள் நிறுவனத்தின் பிரதிநிதி தங்களின் இருப்பிடத்திற்கு நேரில் வந்து அனைத்து திட்டங்களையும் தங்களுக்குப் புரியும்வண்ணம் எடுத்துரைப்பார்கள். தாங்கள் முதலீடு செய்யும் தொகையை எங்கள் பிரதிநிதியிடம் பணமாகவோ, அல்லது காசோலையாகவோ செலுத்தும்பட்சத்தில் பணம் பெற்றுக் கொண்டதற்கான ரசீது மற்றும் சான்றிதழ்களை தாங்கள் பெற்றுக் கொள்ளலாம்.

ஞாயிறு முழு நேர அலுவலகம் உண்டு

ஒரு கற்பனை சந்திப்பு:

# டி.ஆர் meets சரத்!

(ஏ.வி.எம்.ஸ்டூடியோவில் சரத்குமார் நுழைந்து, காரை விட்டு இறங்கும்போது (நா) டி. ராஜேந்தர் வந்து சேர்கிறார்)

சரத் : வாங்க! Back to the pevilion ஆ? (கை குலுக்குகிறார்)

டி.ரா: உஸ்... மெதுவா... மெதுவா... உங்க 'சக்தி'யை எல்லாம் சேர்த்து வச்சுக் கையைக் குலுக்கலாமா?

சரத்: கலைஞரோட இணைஞ்சதுக்குப் பிறகு உங்க சக்தி கூடியிருக்கா, இல்லியான்னு டெஸ்ட் பண்ணினேன்... 'தாய் தங்கை பாசம்' ஊத்திக் கிச்சுன்னு கேள்விப்பட்டேன்?

டி.ரா: அங்கியும், அண்ணன்-தங்கைப் பாசத்த வச்சு 'கூலி' பண்ணீங்க. ஊத்திக்கிச்சுன்னு தான் கேள்வி... அத்த உடுங்க... என்ன திடீர்னு மேடத்துக்கு சப்போர்ட்?

சரத்: திடீர் என்ன திடீர்! ரொம்ப நாளாவே நெனச்சுட்டிருந்தேன்...

டி.ரா: சினிமாவுக்கு வர்த்தகம்தான் முக்கியம். வித்தகம் இல்லேன்னு சொல்லியிருக்கீங்க நீங்க. வித்தகம் எங்க தேவையோ அங்க போய்ச் சேர்ந் திருக்கீங்க?

சரத்: நீங்க கலைஞரோட சேர்ந்தது கூட வை.கோ. போன இடத்தை நிரப்பறதுக்குன்னு தான் பேசிக்கிறாங்க... ஆமா, ஸ்டாலின் விவ காரத்த மறந்துட்டீங்களா?

டி.ரா: ஸ்டாலினை ரஷ்யாவுலேயே மறந்துட் டாங்க சரத்! நான் ஏன் மனகல போட்டுக் குடைஞ்சிக்கணும்?... போட்டும்... போன வருஷம் வேலுச்சாமி, சூரியன், இந்து, கேப்டன், நம்ம அண்ணாச்சி, ராஜபாண்டி, 'அரண்மனைக் காவலன்னு ஏராளமா நடிச்சீங்க. இந்த வருஷமும் மூக்குத்தி காசி, நாடோடி மன்னன், அப்பு ராஜான்னு நெறயப் படம் கைவசம் வச்சிருக்கீங்க. எதுக்கு அரசியல்? அதுவும், 'அம்மா'கூடவா! ஃப்யூச்சர் பிளான் பலம்மா போடறீங்க போல...

சரத்: அம்மாவுக்குத் துணையா இருப்பேன். கவசமா பாதுகாப்புத் தருவேன்...

டி.ரா: கவசம் தேவைதான். எல்லா எதிர்க்கட்சிக்காரங்களும் தாக்கோ தாக்குன்னு தாக்கறாங்க. சுப்பிரமணிய சுவாமி வேற! அதனால சரத் புஷ்டி கவசம்... இல்லே?

சரத்: சரி, வை.கோ. காலி பண்ணின இடத்தை உங்களுக்குக் கலைஞர் கொடுத்திட்டாரா? அதைச் சொல்லுங்க.

டி.ரா: கலைஞர் எனக்குத் தந்த இடம் அவர் உள்ளம். நான் ரொம்பக் குள்ளம். வை.கோ. வெட்டினது பள்ளம். பாயப் போகுது என் ரசிகர் வெள்ளம்.

சரத்: ரொம்பவும் நம்பி ஏமாந் துடாதீங்க, டி.ஆர்! பள்ளத்துல நீங்களே விழுந்தாலும் விழுந்துடுவீங்க! எழுந்திருக்கறது கஷ்டம்...

டி.ரா: அம்மா கால்ல விழுந்தவங்க எல்லாம் எழுந்திருக்கலையா...?

சரத்: அரசியல் உடுங்க. அடுத்த படம் என்ன பண்றீங்க? அதுலயும் அஷ்டாவதானிதானா? உங்களால் மியூசிக் டைரக்டர், கதை-வசன கர்த்தா, டைரக்டர், எல்லார் வேலையும் மிச்சமாகுது. இப்படி எத்தனை படம்தான் பண்ணப் போறீங்க? தாடி நரைக்கிற வரையா?

டி.ரா: தாடி நரைச்சா தாகூர் மாதிரி நடிப்பேன். அப்பவும் உட மாட்டேன்.

சரத்: அதுக்குத்தான் கலைஞரோட கட்சியில சேர்ந்துட்டீங்களே. எப்படியும் கழகத் தோழர்கள் கைவிட மாட்டாங்க. படம் ஊத்திக்காது!

டி.ரா: அரசியல் வேணாம்னுட்டு இப்ப நீங்களே அதைத்தான் பேசறீங்க.

சரத்: சரி, ஷூட்டிங்குக்கு நேரமாச்சு. நான் வரட்டுமா? அப்புறம் சந்திப்போம்.

டி.ரா: தேர்தல் களத்துல தானே? ஓகே!

-சித்தார்த்





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1995

## முதல் பரிசு ரூ. 1,500;
## இரண்டாவது பரிசு ரூ. 1,000;
## மூன்றாவது பரிசு
## (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ. 1,000.

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

● கதைகள் சொந்தக் கற்பனை என்றும் இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.

● நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

● உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

● போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 6 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

● எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

# வாசன்

அன்று மாலை அமைச்சர் ரங்கதுரை அண்ணா சாலை ஓட்டலில் தனியறை ஒன்றில் சூடான பலகாரத்தை ருசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது நேரம் ஆறரை மணி. அடிக்கடி அறைக் கதவு திறக்காதா என்று அவர் பார்த்ததிலிருந்து அவர் யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் என்று தெரிந்தது. அவர் காப்பி குடித்து முடிக்கவும் அறைக்குள் பாலு, சாலமன் இருவரும் நுழையவும் சரியாக இருந்தது.

"வாங்க டாக்டர் பாலு, டாக்டர் சாலமன். நீங்க என்னைக் கூப்பிட்டதுமே எல்லா வேலையையும் ஒதுக்கிட்டு நான் வந்திருக்கேன்" என்று முகத்தில் ஒருவிதமான சிரிப்புடன் சொன்னார் ரங்கதுரை.

"எங்களுக்கு எதிர்பாராத வகையிலே டாக்டர் பிரபுவின் ஆராய்ச்சிக் குறிப்புகள் கிடைத்தன... ஆனால் அவர் ஏதோ பெரிய விஷயம்னு சொன்னதை..." பாலு முடிக்கவில்லை.

"நாங்க இன்னும் கண்டுபிடிக்க முடியலே" சாலமன் சுருக்கி விட்டான்.

ரங்கதுரை அவர்கள் இருவரையும் மாற்றி மாற்றிப் பார்த்தார். 'இந்தப் பயல்கள் என்னையே ஆழம் பாக்கறானுங்களா?' என்று அவர் மனத்தில் தோன்றியது. சிரிப்பை சட்டென வரவழைத்துக் கொண்டு, "சரிங்க டாக்டர்களே... தெரிஞ்ச வரைக்குமாவது எனக்குச் சொல்லலாமில்லே" என்றார்.

பாலுவும் சிரித்தான். சாலமனைப் பார்த்தான்.

"அமைச்சர் ரங்கதுரைக்குச் சொன்னா அதனாலே எங்களுக்கு என்ன லாபம்?" என்று சாலமன் சிரித்தான்.

"சொன்னா லாபம் உண்டு... ஆனா இப்ப லாபம் இல்லை... பின்னால வரும்.... சொல்லலேன்னா நஷ்டம் உண்டு... நஷ்டம் சீக்கிரமே வரலாம்" ரங்கதுரை நன்றாகவே சிரித்தார். அவருடைய காவி ஏறிய பற்கள் அந்தச் சிரிப்புக்கு ஒரு பயங்கர களையை ஊட்டியது.

பாலு நடுநடுங்கி விட்டான். மீண்டும் சாலமனைப் பார்த்தான். சாலமன் பாலுவின் தோளில் இலேசாகத் தட்டினான்.

"மிஸ்டர் ரங்கதுரை... எங்களுக்குத் தெரிஞ்சதை சொல்றோம்... ஆனா ஒரு வாக்கு நீங்க கொடுக்கணும்."

அரசியல்வாதியிடமே சாலமன் பேரம் பேசும் திறமையை பாலு மனதுக்குள்ளேயே பாராட்டினான்.

"என்ன கேக்கறீங்க டாக்டர்களே" என்றார் ரங்கதுரை.

"நீங்க இந்த ஆராய்ச்சியை எப்படிப் பயன்படுத்தப் போறீங்கன்னு எங்களுக்குப் புரியலே... அதை நல்ல காரியத்துக்குப் பயன்படுத்தினா எங்களுக்குத் தானாகவே பாராட்டு வரும்" சாலமன் சற்று நிறுத்தினான்.

ரங்கதுரை புருவங்களை உயர்த்தினார்.

சாலமன் தொடர்ந்தான். "ஆராய்ச்சியைத் தவறான வழியிலே பயன்படுத்தும் போது டாக்டர் பாலு, டாக்டர் சாலமன்னு நீங்க எங்க பேரை இழுத்தா உங்க பேரும் அடிபடாதா? நாம மூணு பேருமே கவனமாய் இருக்க வேண்டாமா?" என்று முடித்தான்.

ரங்கதுரை தலையை ஆட்டினார். "சாலமன், நீங்க சொல்றது உண்மையான பேச்சு. அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம்... நீங்க என்னை முழுக்க நம்பலாம்" என்றார்.

அரசியல்வாதியை முழுக்க நம்பும் காலம் உலகத்தில் எந்த நாட்டிலுமே நடக்காத காரியம் என்பது சாலமனின் வாதம். ரங்கதுரை சொன்னதை நினைத்து உள்ளுக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்.

"டாக்டர் பிரபு 'மேலதயான்' என்ற பூச்சிக்கொல்லி பற்றிய சிறப்பு ஆராய்ச்சி ஒன்று செய்து வருகிறார். ஆராய்ச்சிக்கு எலிகளைப் பயன்படுத்துகிறார். எலிகளின் வளர்ச்சி, எடை, மற்றும் மாற்றங்களைப் பற்றி கவனமாகக் குறிப்பெடுத்து வருகிறார்."

"இது எந்த பூச்சிக்கொல்லி மருந்து பற்றியும் மேல்நாடுகளில் செய்யற ஆராய்ச்சிதானே டாக்டர்களே... என்ன சிறப்பு?" என்று ரங்கதுரை சொன்னதும் சாலமன் அதிர்ந்து விட்டான்.

ரங்கதுரைக்கு 'இந்த அளவு விவரம்

## மாண்புமிகு கம்சன்

# 5

எப்படித் தெரிந்திருக்கிறது?' என்பது அவனுடைய வியப்புக்குக் காரணம்.

"விவசாயத் துறையைப் பத்தி நான் நிறைய தெரிஞ்சு வைச்சிருக்கேன் டாக்டர்களே... அமைச்சர் பதவி சும்மாவா?" ரங்கதுரை சாலமனின் கேட்கப்படாத கேள்விக்குத் தானாகவே பதில் சொன்னார்.

"நான் 'மேலதயான்' பற்றிச் சொல்லி முடிக்கலையே... அதை ஆண் எலிகளுக்குக் கொடுக்கும் போது உயிரணுக்கள் ஏரானமான அளவிலே குறைகிறது... அதனாலே எலிப்பெருக்கம் குறையும்" சாலமன் முடித்தான்.

"அப்படியா... அந்த மருந்து... என்ன பேர் சொன்னீங்க" ரங்கதுரை நிறுத்தினார்.

"மேலதயான்" பாலு நிதானமாக ஒரு முறை சொன்னான்.

"அதான்... அந்த மருந்தை எலிகளுக்குக் கொடுக்கும் போது வேறு ஏதாவது தொல்லைகள் உண்டாகுமா? புற்றுநோய் போன்ற விவகாரங்கள் உண்டா? உயிருக்கு ஆபத்து உண்டா?" ரங்கதுரை கேள்விகளை அடுக்கினார்.

"இதுபோன்ற விவரங்களை ஏற்கெனவே அமெரிக்காவில் ஆராய்ச்சி மூலம் வெளியிட்டிருப்பாங்க... டாக்டர் பிரபு அதைப் பற்றியெல்லாம் அதிகமாக நேரம் வீணாக்க மாட்டார்" என்றான் பாலு.

"நான் அதைச் சொல்லவில்லை.... அது போன்ற விவரங்களும் எனக்கு - ஏன் உங்க இரண்டு பேருக்கும் கூட - தெரிந்தால் நல்லது... ஆராய்ச்சிக் கட்டுரைகளிலிருந்து நீங்கள் விவரம் சேகரித்துச் சொல்ல முடியுமா?" என்று ரங்கதுரை கேட்டார்.

"அடுத்த வாரம் சொல்லலாமா?" என்றான் பாலு.

"நிச்சயமாக... அடுத்த வா்ரம் உங்களுக்கு விவரம் கிடைத்ததும் என்னைக் கூப்பிடுங்






— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

கள்.... வேறு எங்கேயாவது சந்திக்கலாம்... சரியா?" என்று எழுந்தார்.

ரங்கதுரை புறப்பட்டதும் பாலுவும் சாலமனும் காப்பியாவது குடிக்கலாம் என்று அதே ஓட்டலின் டைனிங் ரூம் சென்று உட்கார்ந்தார்கள்.

"அந்த ரங்கதுரை காப்பி சாப்பிடறியான்னு கூட கேக்கலையே" என்றான் பாலு. பிறகு இருவரும் ரங்கதுரை, 'மேலதயான்' ஆராய்ச்சி என்று பேசிக் கொண்டு காப்பியை முடித்து விட்டுப் புறப்பட்டனர்.

அவர்களுக்கு முதுகுப்புறத்தைக் காட்டி உட்கார்ந்திருந்த போட்டோகிராபர் மூர்த்தி அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டதை இருவருமே கவனிக்கவில்லை.

நீலா வீட்டுக்கு வந்து அரைமணிக்குள் தன்னை அலங்கரித்துக் கொண்டாள். சேது வந்ததும் இருவரும் அன்று மாம்பலத்தில் பெரிய ஓட்டல் ஒன்றில் சாப்பிடுவதாகத் திட்டம் போட்டிருந்தார்கள். 'சேதுவுடன் ஸ்கூட்டரில் போய் மாதக் கணக்காகிறதே' என்று நீலா நினைத்த போது அவள் மனம் வேதனைப்பட்டது. இந்த நிருபர் வேலை இவ்வளவு நேரத்தை எடுத்துக் கொள்ளும் வேலையாக இருக்கிறதே... ஒய்வு இல்லாமல், குடும்ப வாழ்க்கையைக் கவனிக்க முடியாமல்... என்றெல்லாம் நீலா நினைத்துக் கொண்டே தன் அலங்காரத்தை முடித்தாள்.

சேதுவும் சொன்னபடி ஆறு மணிக்கு வந்து விட்டான்.

"நீலு... நீலு..." என்று கூவியபடியே அவன் உள்ளே நுழைந்தான்.

சேது 'நீலு' என்று கூப்பிட்டு எத்தனை நாட்கள் - இல்லை மாதங்கள் ஆயின. நீலாவின் மனம் துள்ளியது. இன்று போல் என்றுமே இருவரும் மனமகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும். அதற்காக அவள் எந்த முயற்சியும் எடுப்பதாய் மனதுக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்.

"என்ன சேது... பழையபடி நீலுன்னு கூப்பிடறீங்க?" என்றாள் கிண்டலாக.

"இன்னக்கி என் பழைய நீலுவா நீ இருக்கே! அதான்... இரு, நான் இன்னும் கால் மணியில் தயாராகி விடுவேன்" என்று உள்ளே ஓடினான் சேது.

"ஆளுக்கு இன்னொரு பாசந்தி" என்று சேது சொன்ன போது, நீலா அவனை வியப்புடன் பார்த்தாள்.

"என்ன சேது! இப்போதுதானே ஒரு பாசந்தி சாப்பிட்டு முடிச்சோம்" என்றாள்.

"இத்தனை மாதமாக நாம வெளியே சேர்ந்து வந்து சாப்பிடாத குறையெல்லாம் மறக்கத்தான் இரண்டாவது பாசந்தி" என்று சிரித்தான்.

"சாப்பிட்டு முடிந்ததும் பனகல் பார்க்கில் கொஞ்ச நேரம் உட்கார்ந்து பேசி விட்டுப் போகலாமா சேது?"

"நீலு சொன்னா சேது செய்ய மாட்டானா?"

மீண்டும் ஸ்கூட்டரைக் கிளப்பி, பனகல் பார்க் வரை போய் அதை வைக்க இடம் கண்டுபிடிக்க அலைய சேது விரும்பவில்லை. இருவரும் நடந்தே பூங்காவை அடைந்தார்கள். நடப்பதும் அந்த நெரிசலில் எளிதான காரியமில்லை. நீலா கழுத்து வரை புடைவைத் தலைப்பால் போர்த்திக் கொண்டு நடக்க வேண்டியிருந்தது. 'சங்கிலித் திருட்டு' இன்னும் குறையவில்லையே.

"ஏய், நீலு... பார்க் வந்தாச்சு... இன்னும் என்ன யோசனை?" சேதுவின் குரல் நீலாவை அழைத்தது.

"ஒண்ணுமில்லை... நம்முடைய தினசரி, அவசர வாழ்க்கையைப் பற்றித்தான் யோசனை" என்றாள்.

"அது இருக்கட்டும்... அதை மறக்கத்

வெற்றி பெறும் வகைகள், நீடித்துழைக்கும் நிறங்கள்

## பாம்பேடையிங் பள்ளிச் சீருடைத்துணிகள்.

வெற்றி வாகை சூடி என்றும் முன்னணியில் உள்ள இத்துணிகள் கீழ் கண்ட சிறப்பம்சங்களைக் கொண்டுள்ளன :

- துவைக்க மற்றும் உடுக்க எளிதானது
- நிறங்கள் மங்காது
- ஒவ்வொரு சலவைக்குப் பின்னும் புத்தம் புதியது போல் தோன்றும்.
- சுருக்கங்கள் ஏற்படாது.
- உங்களுக்குத் தேவையான நிறங்களில் கிடைக்கிறது.

பாம்பே டையிங் பள்ளிச் சீருடை அணிவரிசையில் சூட்டிங்ஸ் மற்றும் தூய பருத்தி மற்றும் பாலியெஸ்டர் ப்ளெண்டுடன் கூடிய ஷர்ட்டிங்ஸ், பள்ளிப் பைகள் மற்றும் லாக்ஸ்களும் உட்பட்டதாகும்.

# பள்ளிச் சீருடைத்துணிகள்

பாம்பே டையிங் 

MASONS/BD/687/TAM




# டெபாசிட் திட்டங்கள்

| ஃபிக்சட் டெபாசிட் | | |
|---|---|---|
| காலம் | வட்டி விகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
| ஓர் ஆண்டு | **24%** | ரூ.10,000/- |

ஊக்கத் தொகை 1%

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | | |
|---|---|---|---|---|
| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்தர வட்டி | ஊக்கத் தொகை |
| 13 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 27.70% | 1.5% |
| 25 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,000/- | 28.80% | 3.0% |
| 37 மாதம் | ரூ.15,000/- | ரூ.30,000/- | 32.4% | 4.5% |

## ஈஸ்வரி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.**25,000**
இரு மடங்காகிறது
**37** மாதங்களில்
ரூ.**50,000/-**
ஊக்கப்பரிசு
**4** கிராம் தங்கக்காசு

## திருமலா பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.**50,000**
மும் மடங்காகிறது
**60** மாதங்களில்
ரூ.**1,50,000/-**
ஊக்கப்பரிசு
**8** கிராம் தங்கக்காசு

ESWARI

**ஈஸ்வரி பைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

(ஈஸ்வரி குரூப் நிறுவனங்கள்)

தலைமை & நிர்வாக அலுவலகம்: 4, எல்டாம்ஸ் ரோடு, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி: 455349, 459557, 457583.

கிளைகள் : நெ. 13, ரட்டன் பஜார், பாரிமுனை, சென்னை-3. போன்: 560767,
49, வடக்கு உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-17. போன் 8259061,69, முதல் மாடி,
புரசைவாக்கம் நெடுஞ்சாலை, புரசைவாக்கம், சென்னை-7. போன்: 5324937, 5324940,
நெ. 72, ஜி.எஸ்.டி. ரோடு, குரோம்பேட்டை, சென்னை-44. 0போன்: 405845, நெ. 11, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. போன்: 841187, நெ. 19/6, 4வது மெயின் ரோடு, முதல் மாடி,
நங்கநல்லூர், சென்னை-61. போன்: 2345891, நெ. 13, ஆற்காடு சாலை, சாலிக்கிராமம்,
சென்னை-93. போன்: 428650, நெ. 25, முதல் மாடி, ஜவஹர்லால் நேரு தெரு, பாண்டிச்சேரி-1. போன்: 31830.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்!**

LOTUS/95

தானே நாம வெளியே வந்தோம்... வேறு ஏதாவது பேசுவோமா?"

"எதைப் பற்றி சேது?"

"நமக்குக் குழந்தை ஏன் இன்னும் பிறக்கவில்லை என்பதைப் பற்றிப் பேசினால் நீலு வருத்தப்பட மாட்டாளே" என்றான் அவன் கன்னத்தை லேசாகத் தட்டி.

"நானும் அதைப் பற்றி யோசனை செய்யாமலில்லை."

"நல்லது... என்ன யோசனை?"

"நாம இரண்டு பேரும் பெங்களூர் போய் அங்கே 'இன்பெர்ட்டிலிடி க்ளினி'க்கில் பரிசோதனைகள் செய்து கொண்டால் என்ன?" நீலா குறிப்பாகவே சொன்னாள்.

"அதெல்லாம் தேவைதானா நீலா? நீதான் ஏற்கெனவே ஒருமுறை கருத்தரித்தாயே?"

"அது இரண்டு வருஷத்துக்கு முன்னால் சேது... இரண்டு வருஷமா இப்படி இருக்கே... எனக்குப் புரியவில்லை."

"நமக்கு வாழ்க்கையிலே ரொம்ப 'டென்ஷன்' நீலு... இரண்டு பேருமே 'ரிலாக்ஸ்' செய்யறதில்லே. அது கூடக் காரணமாக இருக்கலாமே."

"இருக்கலாம்... அதுவும் காரணமாக இருக்கலாம்..."

"அப்படின்னா வேற காரணங்கள் இருக்கும்னு நினைக்கிறியா நீலு?"

"நான் என்ன ஸ்பெஷலிஸ்ட் டாக்டரா? இப்பெல்லாம் விஞ்ஞானத்தின் உதவியாலே மருத்துவத் துறையில் எவ்வளவு முன்னேற்றங்கள்னு உங்களுக்கு நான் சொல்லணுமா? அதை நாமும் பயன்படுத்திக்கலாமேன்னு நினைக்கிறேன்."

"என்ன செய்யணும்னு சொல்லேன்."

"நாம ஒருமுறை பெங்களூர் க்ளினிக் போய் வருவோம்... இரண்டு பேருமே சில முக்கிய 'டெஸ்ட்'டுகளைச் செய்து கொள்வோம்...."

"நான் எதுக்கு 'டெஸ்ட்' செய்து கொள்ள வேண்டும்? என்னிடம் குறைன்னு நீ சொல்றியா?"

சேதுவிடமிருந்து இந்த பதிலைத்தான் நீலா எதிர்பார்த்தாள். சந்தேகமேயில்லை. சேதுவும் கோடிக்கணக்கான ஆண்களில் ஒருவன்தானே. ஆண்களுக்கென்று இருக்கும் ஆணவம் சேதுவுக்கும் இருக்காதா? 'ஆணவம்' என்ற சொல்லே 'ஆண்' என்றதிலிருந்து தான் வந்ததோ?

"என்ன நீலா... நான் கேட்டதுக்குப் பதிலே சொல்லலையே" சேது மீண்டும் 'நீலு'வை விட்டு 'நீலா'வுக்கு மாறியதும் அவள் சற்று தொலைவில் போக ஆரம்பித்தாள்....

"சேது... நீங்களும் நானும் மனித இனம் தானே? இருவருக்குமே 'பயலாஜிகலா' குறைகள் இருக்கலாமே. பெண்களுக்கு மட்டுமே குறை என்பது எந்தவிதத்தில் சரியான வாதம்?" என்றாள்.

"நிருபர் நீலா சொல்லும் போது தப்பாகுமா?" என்று சேது கிண்டல் செய்தான்.

"எனக்குக் கோபம் வரும் சேது" என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள் நீலா.

"ஏய், நீலு... நீ சொல்றபடியே செய்வோம். பெங்களூர் போய் வருவோம், சரிதானே" என்றான் சேது.

நீலாவினால் நம்ப முடியவில்லை.

"இத்தனை நேரம் என்னை வேணும்னே கலாட்டா செய்தீங்க... அப்படித்தானே?"

"ஒண்ணு உண்மை... மற்றபடி நிறைய கலாட்டா."

"எது உண்மை?"

"குழந்தை வேணுங்கறது."

"சேது... சேது..." என்று மேலே பேச முடியாமல் நீலா சேதுவின் கையைப் பிடித்துக் கொண்டாள். அவள் கண்கள் குளமாயின.

"போகலாம், நீலு... மணி பத்தடிக்கப் போகுது" என்று அவளை அழைத்தான்.

அவர்கள் வீட்டு வாசலில் ஓர் ஆட்டோ நின்றிருந்தது. மூர்த்தி இறங்கினான்.

"ஹலோ, சேது, நீலா... நீங்க இன்னும் பத்து நிமிஷத்துலே வர்றலேன்னா நான் போறதாய் இருந்தேன்."

"இந்த நேரத்துலே இவன் எதுக்கு வந்திருக்கான்" என்று சேது எரிச்சலடையக் காரணம் இருந்தது.

"நான் இரண்டே நிமிடம்தான் நீலாவிடம் பேசணும் சேது... ஒரு மிக முக்கிய செய்தி..." என்று இழுத்தான்.

நீலா, மூர்த்தி இருவரையும் ஒருமுறை மாற்றி மாற்றிப் பார்த்து விட்டு சேது 'க்ளுக்' என்று சிரித்தே விட்டான். பிறகு அவன் வீட்டுக்குள் போனான்.

(தொடரும்)

---

"தலைவர் உங்களை கட்டி அணைச்சுக்க நெருங்கி வந்தப்போ, விலகிப் போய் கையை மட்டும் குலுக்கினீங்களே, ஏன்?"

"போன தடவை இப்படி அணைச்சுக்கிட்டப்போ நைசா என் ஜிப்பாவிலே இருந்த பர்சை அடிச்சிட்டாரு. அதான்."

- டி. என். பாலகிருஷ்ணன்



# பசித்தவன்

பா. ராகவன்

பசி வந்து விட்டது. பாக்கட்டைத் தொட்டுப்பார்த்தேன். கடைசி கடைசியாக ஒட்டிக் கொண்டிருந்த இருபது ரூபாய் நோட்டு உள்ளேன் ஐயா என்றது. பறந்து போகப் போகிற நோட்டு.

நாட்டில் விலைவாசி எக்கச்சக்கமாக ஏறி விட்டது. என் போன்ற சாமானியர்கள் ஹோட்டலிலெல்லாம் சாப்பிடுகிறபடி வைத்துக் கொள்ளத் தகாது. தேவதைகளால் சபிக்கப் பட்டவர்களுக்கு புளித்த மோர் சாதமும் நாரத் தங்காயும்தான் சரி. அல்லது சிங்கிள் சாயா வித் பொறை.

நிலைமை இப்படி இருக்க, ஒரு மணிக்கு சொல்லி வைத்தாற்போல் பிராண்ட ஆரம்பிக்கும் வயிற்றுக்கு விவஸ்தை கிடையாது. கவா கவா என்று பேய்க் கூச்சல். எட்டு மணிக்குச் சாப்பிட்ட நாலு இட்டிலி எங்கே போயிற்று அதற்குள்?

பிரசித்தி பெற்ற கத்தீட்ரல் ஹைரோடில் ஒரு உடுப்பி ஹோட்டல் கூட இல்லாதது யார் தப்பும் அல்ல; என் விதி. சோழாவும் மாரீஸும் காற்றில் ஏறி விண்ணைச் சாடிக் கொண்டிருக்க, கொஞ்சம் குன்னமான ஹோட்டல் எதும் தென்படாதா என்று அலைந்தேன்.

சீனர்கள் குள்ளமானவர்கள். பெரும்பாலும் சீன ஹோட்டல்களும் குள்ளமாகவே இருக்கின்றன. ஆனால், பளபளப்புடன். கடவுள் அருளால் கண்ணில் பட்டுவிட்ட, அந்த ஓலை வேய்ந்த சீன ஹோட்டல் என்னை இழுத்தது. நட்சத்திர அந்தஸ்து ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. இருபது ரூபாய்க்கு இரண்டு இட்டிலி கிடைக்காமலா போய்விடும்? டிப்ஸ் வைக்காமல் வந்து விட்டால் திரும்பி குரோம் பேட்டை போக பஸ் சார்ஜ் மீதமாகலாம்.... வேறு வழி இல்லையென்றால் வித்-அவுட்....

'சீக்கிரம் போயேண்டா சோம்பேறி' என்ற ஸ்டொமக்கை சமாதானப்படுத்தி, முன்னேறி, பித்தளைக் கதவில் கைவைத்துத் தள்ளினேன்.

முகத்தில் அறைந்த ஏஸி, 'கோவிந்தா' என்றது.

சே! என்ன ஒரு ஏமாற்று! ஓலைக் கொட்டகைக்குள் வஸந்த மாளிகையை என்னத்துக்காக ஒளித்து வைத்திருக்கிறார்கள்? என் போன்ற அப்பாவி, போஸ்ட் கிராஜுவேட், வேலையற்ற, இன்டர்வியூ வேட்டையாளர்களை ஏய்க்கவா?

திரும்பி விடலாமா?

பேரவமானம். சீனர்கள், சின்னக் கண்களால் சிரிக்கக் கூடும். அதை விட, உள்ளே நுழைந்ததும் திரும்பிப் பார்த்துவிட்ட அந்த மின்னல் பொம்மை....

விதியைச் சபித்தபடி வாகான மூலையைத் தேர்ந்தெடுத்து, சிம்மாசனத்தில் புதைந்தேன். என் பார்வையில் உயர்ந்து நின்ற கண்ணாடியில் பின்புறம் அந்த ஒயில் வடிவம்....

சின்னச்சின்ன மேஜை நாற்காலிகளில் பணக்காரர்கள் மௌனமாக மென்று கொண்டிருக்க, திடீரென்று எழுந்த சந்தேகத்தில் அவசரமாக என் இருபது முழு ரூபாய் நோட்டை ஒருதரம் எடுத்துப் பார்த்துக் கொண்டேன். கசங்கலாக, ஏழ்மையாக... நல்லவேளை, கிழிசலாக இல்லை.

பார்ஃப்யூம் மிதக்கிற ஏஸி குளிரில் மிதமான பலகார வாசனையும் கலந்து நாசியில் நுழைந்து நரம்புகளை மீட்டிய வேளையில் பேரர் என்னை வணங்கி வழுக்கும் மெனு அட்டையை வைத்துப் போனான். அவன் கடந்து போன வினாடிகளில் என்னை விடவும் சுத்தமாக, டீஸன்ட்டாகத் தெரிந்தான்.

பொறாமையாக இருந்தது. நாலு பைஸா பெறாத என் எம்.காம். பேசாமல் இந்தச் சீனனிடம் ஸலாமிட்டு வேலை கேட்கலாமா? இருபத்திநாலு மணி நேர ஏஸி வாசம். வேளைக்குச் சோறு. வேலைக்குக் கூலி. வெள்ளை ஆடை.....

படிப்பு அல்ல; உத்தியோகம் புருஷ லட்சணம். பிளேட் துடை. கலாய் பூசு. போஸ்டர் ஒட்டு. டிக்கெட் கிழி. பெல் அடித்தால் எழுந்து போ. ஸலாம் இடு. கார் கதவைத் திற. ரயிலில் கர்ச்சிப் விற்றுப்பார். அல்லது கடலை. ஒட்டை எம்காமை உடைப்பில் போடு.

மெனு கார்டைத் தடவியபடி இருந்தேன். பேரர் ஒரு தரம் வந்து ஜில்லென்று தண்ணீர் வைத்து போனான். உடனே எடுத்துக் குடித்து முடித்தேன். இதற்கு பில்

தர மாட்டார்கள்....

கார்டு ஐட்டங்கள் எனக்கு முற்றிலும் அன்னியமாக இருந்தன. என் தகுதிக்கேற்ற இட்டிலி, தோசை வகையறாக்களை அச்சடிக்க மறந்திருந்தார்கள். பதினேழரை ரூபாய்க்கு உண்டான ஏழை உணவைத் தேர்ந்தெடுத்து பேரரிடம் காட்டினேன். மனதுக்குள் அவன் சிரித்துக் கொண்டிருக்கக் கூடும். படவா, உனக்கு டிப்ஸ் கிடையாது போ!

மறுபடியும் நான் கண்ணாடியைப் பார்க்க, பின் புறத்துப் பெண் வடிவம், நூடுல்ஸை கவிதை மாதிரி எடுத்து உதட்டில் படாமல் உண்ணும் நளினம் தெரிந்தது.

பெண்களுக்குக் கடவுள் சில விசேஷத் தன்மைகளை அருளி இருக்கிறார். லாகவம். நளினம். மென்மை. கூடுதலாக எதையும் சாதிக்கவல்ல ஒரு மின்னல் புன்னகை. ஒரு look.

எனது கல்லூரி நாட்களில் இதெல்லாம் எனக்குப் பேராச்சரியங்கள். ஆண்களின் அணுகுமுறையில் ஏன் ஒரு 'வருடல்' தன்மை எப்போதும் இருப்பதில்லை?

பீங்கான் கிண்ணங்களை மேசையில் பரப்பி, வெண்ணுடை வேந்தன் போய் விட்டான். நான் திறந்து பார்த்தேன். அங்கிங்கெனா

தபடி எல்லா டேபிள்களிலும் பல்வேறு ரேட் மற்றும் வடிவங்களில் இருக்கும் அதே நூடுல்ஸ். மேற்புறம் - அதென்ன, மிளகோ



வேறென்னவோ. தொட்டுக்கொள்ள கொத்தமல்லி, புதினா மற்றும் சில பெயர் தெரியாத இலை, தழைகளின் கலவை. ஒரு துண்டு கேரட். கொஞ்சம் பச்சை மிளகாய்ச் சாறு. கடவுளே, இதென்ன காம்பினேஷன்?

பளபளக்கும் கத்தி, பிச்சவாக்கன். ஒன்றை எடுத்துக் குத்தி, இன்னொன்றால் ஏந்தி உண்ண வேண்டிய அவலம்.

மறத்தமிழனுக்குக் கரங்களே ஆயுதம். ஆனால் இங்கு அது உதவுமா? பின்புற தேவதையின் நளினம் என்னை மேலும் கலவரப்படுத்திற்று. நான் எப்போது சாப்பிட்டு முடிப்பேன்!

என் இயல்புக்கு ஒவ்வாத சூழலில், என் பார்வைக்கு ஆகாத மனிதர்கள் மத்தியில் என் பழக்கத்தில் இல்லாத முறையில் உண்ண முனைவது எனக்கே விநோதமாக இருந்தது.

மெல்லிய ஸ்பூன் மற்றும் திரிசூல வஸ்துவில் நூடுல்ஸ் நிற்க மாட்டேனென்கிறது. எடுப்பதில் பாதி வழுக்கி விழ, கொஞ்சம் வெளியே சிந்த, கொஞ்சம் என் மீசையில் ஒட்டிக் கொள்ள, முப்பத்து முக்கோடி தேவர்களும் என்னை வேடிக்கை பார்ப்பதாகப் பட்டது. மிகவும் குன்றிப் போனேன். ஸ்பூனால் சாப்பிடக் கூட உதவாத என் எம்காம்.....

எனக்கு வியர்த்து விட்டது. சூழ்

நிலை மிகவும் இறுகிவிட்டதாகத் தோன்றியது. சில நேரத்து கவர்க்கடிகாரம் மணி இரண்டு என்று அறிவிக்க, காட்... முக்கால் மணி நேரமாக இங்கே உட்கார்ந்திருக்கிறேன்....

முற்பிறவிகளில் எந்த சினனுக்கு வில்லனாக இருந்தேனோ, விதி என்னைப் பழிவாங்கிக் கொண்டிருந்தது.

நூடுல்ஸை முடித்து, என் பின்புற தேவதை ஐஸ்கிரீமுக்கு ஆர்டர் தருவது கண்ணாடியில் தெரிந்தது.

கடவுளே! என் சங்கடங்களை அவள் பார்த்திருப்பாளோ. பேன்ட் போட்ட பட்டிக்காடு என்று கருதியிருக்கக் கூடும்.

சரேலென்று ரத்தம் சூடேற, ஆயுதங்களை விட்டெறிந்து, இரண்டு கைகளாலும் அள்ளி அடைத்துக் கொண்டு, ஒரே ஓட்டமாக ஓடி விடலாமா என்று தோன்றியது.

அப்போதும் சினன் சிரிப்பான்; சின்னப் பெண் சிரிக்கும்....

எனக்குப் பசி போய்விட்டது. பரபரப்பை அடக்க, நிறைய தண்ணீர் குடித்திருந்தேன். ஏகமாய் வியர்த்திருந்தது. இயல்பில் நான் மிகவும் அமைதியானவன். பரபரப்பெல்லாம் அடங்கி, அநேகமாக புத்தராகிக் கொண்டிருப்பவன். எனக்கும் சமூகத்துக்கும் இடையிலான மௌனப்போரை நானே ஒதுங்கி இருந்து ஒரு பார்வையாளனாக நோக்கும் பக்குவம் பெற்றிருந்தேன். ஆயினும் இன்றைய தினத்து, எனது பரபரப்புக்குக் காரணம் இருந்தது. அந்தப் பெண். அவளது இயல்பான நளினம். கண் முன்னால் அவளிடம் எதற்கோ நான் தோற்றுக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. கடவுளே, நான் ஏன் இந்த ஹோட்டலுக்கு வந்தேன்?

**பா**தி பிளேட் காலியாகியிருந்தது. ஒரு வழியாக. பதினேழரை ரூபாய். மிச்சம் வைக்க மனம் வரவில்லை. இது மாதிரியான சந்தர்ப்பங்களை புத்திக் கொள்முதல் என்று அப்பா குறிப்பிடுவார். புண்ணியங்கள் பல செய்து அரசு உத்யோகத்திலிருந்து ரிடையராகி, பென்ஷன் வாங்கும் அப்பா. இந்தக் கசங்கல் இருபது ரூபாய் கூட அவரது பெருந்தன்மையின் வெளிப்பாடுதான். 'வயசுப் பையன் காசில்லாமல் வெளியே போகிறதாவது' என்கிற உன்னத சிந்தனை.

கண்ணாடியில் பெண் வடிவம் ஐஸ்கிரீமில் கரைந்து கொண்டிருப்பதைக் கண்டேன். அவள் முகமும் தோரணையும் என்னை வெகு பாதித்தது. பணத்தின் போஷாக்கு கூந்தல் முதல் ஷூவரை தெரிந்தது. வாழ்க்கையில் கவலை என்கிற பக்கங்களைப் புரட்டிக் கூடப் பார்க்காதவளாக இருக்கக் கூடும். சட்டென்று எனக்கு உலகம் முழுக்க செழித்து, நான் மட்டும் உதிர்ந்து விட்டது போல் ஒரு கனம் நெஞ்சை அடைத்தது. பதினேழரை ரூபாய். ஒழியட்டும். கையை உதறிவிட்டு எழுந்தேன்.

பேரர் தந்த பில்லை, நானே நேரில் கவுண்ட்டரில் கொடுத்து மறக்காமல் மீதி வாங்கிக் கொண்டு விரைந்து வெளியேறினேன்.

**ப**ஸ் பிடித்து வீடு சேரும்வரை சகட்டுமேனிக்கு யோசித்தபடி இருந்தேன். எப்போதும் போல என்னைப் பற்றி - என் எம்காம் பற்றி. நாம் நினைக்கிற எதுவுமே நடக்காமல் போவதற்கு பெயர்தான் வாழ்க்கையா என்று கேட்கத் தோன்றியது. யாரைக் கேட்பது? நின்று, யோசித்து பதில் சொல்வதற்கு என்னைப் போல் யாரும் 'சும்மா' இருக்கிறதில்லை...

வாசலில் என்னைப் பார்த்ததும் அம்மா எழுந்து வந்தாள். கடவுளே, இவள் கேள்வி ஏதும் கேட்காதிருந்தால் தேவலை.

கேட்கவில்லை. வாழ்க.

"கால் அலம்பிண்டு, சாப்பிட வா" என்றாள்.

நான் தேவதைகளால் சபிக்கப்பட்டவன். ஆனாலும் ஒரு பரிதாபத்தின் பேரில் அம்மா புளிக்காத மோர் சாதம்தான் போடுகிறாள்... உட்கார்ந்தேன்.

"இன்னிக்கு ஒரு சேஞ்ச்!" என்று அம்மா சிரித்தாள்.

ஆவி பறக்கக் கொண்டு வந்த தட்டில் வெள்ளைக் கோலமாக நூடுல்ஸ் இருந்தது.

எவர்ஸில்வர் ஸ்பூன் எகத்தாளமாகச் சிரித்தது.

"நேத்து என் காதலர் என்னை திடீர்னு கட்டிப் பிடிச்சு முத்தம் குடுத்துட்டார். எனக்கு உடனே கோபம் வந்து சரமாரியாகத் திட்டிட்டேன்!"

"ஐய்யோ என்னடீ சொன்னே?"

"ச்சீ! நீங்க ரொம்ப மோசம்'னு!"

— எம். முருகேசன்



# நந்தவன தேரு

முக்கோணக் காதல் வெச்சி
முந்நூறு படம் ஆச்சு - அட
அத்தோட இன்னொண்ணா
இதுவும் சேர்ந்து போச்சு.

வழக்கமான வல்லவருக்கும்
வயசுப்புள்ள ஹீரோ - ஒரு
வகையில்லாத திரைக்கதைக்கு
வாய்ச்ச மார்க்கு ஜீரோ.

வில்லன் போன பின்னால
விஷயம் என்ன இருக்கு? - ஒரு
துள்ளலில்லா பின்பாதி
தூக்கம் தரும் சரக்கு.

சின்னப் பொண்ணு ஸ்ரீநிதியின்
சிரிப்பு ஒரு விருந்து - அது
கன்னம் வெச்சி மனசைக் கொள்ளை
கொண்டு போகும் பருந்து.

இசைஞானி இருப்பதால
இனிமை கொஞ்சம் இருக்கு - அட
உசிரு போன கதை மணக்க
ஊதுவத்தி எதுக்கு?

அரைச்சமாவு விஷயம் சொல்ல
அல்லாரும் இருக்காங்க - இங்க
உரிச்ச கோழிக் குப்பை போட
உதயகுமார் எங்க?

- (மண்டைகாய்ந்து)
குரோம்பேட்டை கவிராயர்





# சேலத்துச் சிரிப்பு

# சோடியம் வி

## 'சூப்பரான சப்வே'!

தாரமங்கலத்தில் உள்ள பழம்பெரும் கோயில் கைலாசநாதர் கோயில். இங்குள்ள ஒரு சுரங்கப்பாதை வழியே சென்றால் பன்னிரண்டு கிலோமீட்டர் அப்பால் உள்ள சோரகை என்ற ஊரின் முருகன் கோயிலை அடையலாம். அக்காலத்தில் அரசர்கள் பாதுகாப்புக்காக அமைத்த பாதாள வழியாம்!

காப்பரத்தாம்பட்டி. கே. ராஜாதிருவேங்கடம்.

## பார்த்தேனே!

"கண் ரொம்ப மங்கலாத்தான் தெரியுது..."

"டாக்டரைப் போய்ப் பார்த்தியா?"

"பார்த்தேனே... அவரும் மங்கலாத்தான் தெரியறாரு...!"

சந்தியூர். ஏ.கோவிந்தன்.

## இதுவும் ரஜினி ஸ்டைல்!

வேலூர்[சேலம்] அபிராமி தியேட்டர் அருகே இரண்டு இளைஞர்கள் பேசிக்கொள்ளக் கேட்டது...

"இனிமேல் ரஜினிகாந்த் வருமான வரி கட்டவே மாட்டாரு... ஏன் தெரியுமா...?"

"தெரியலையே...ஏன்டா?"

"ஏன்னா அவரு ஒரு தடவை வரி கட்டினா நூறு தடவை கட்டின மாதிரி!"

## சோடியம் விடு தூது!

வேலூரில் பி.எஸ்ஸி. வேதியியல் படித்துக் கொண்டிருந்தேன். 'லேபில்' பரிசோதனைக்காக ஒரு மாணவன் 'சோடியம்' தனிமத்தை டெஸ்ட் டியூபில் வைத்துச் சூடுபடுத்திக் கொண்டிருந்தான். அவன் கவனக் குறைவினால் சோடியம் 'டப்'பென்று வெடித்துப் பறந்து, ஒரு மாணவியின் கோட் பாக்கெட்டுக்குள் விழுந்து விட்டது. நல்ல வேளையாக அதை உடனே அணைத்து விட்டார்கள். சேதம் ஏதுமில்லை. வகுப்பில் இலேசான சலசலப்பும் சிரிப்பும் கிளம்பியது. சம்பந்தப்பட்ட மாணவனும் மாணவியும் மட்டும் வெட்கப்பட்டுத் தலை குனிந்து விட்டனர். இந்த நிகழ்ச்சிக்குப் பின் அந்த மாணவனும் (என் நண்பன்) மாணவியும் காதலிக்கத் தொடங்கி இப்போது கல்யாணம் செய்து கொண்டு விட்டனர். சோடியம் விடு தூது என்று இச்சம்பவம் காலேஜ் முழுதும் பிரபலமாகி விட்டது.

கட்டமரபாளையம். சி. கண்ணன்.

## 'எதுக்கு வந்தே?'

சேலம் டு ஏற்காடு ரூட்டில் வாழவந்தி என்ற ஊர் உள்ளது. இந்த ரூட் பஸ்ஸில் ஏறிய ஒரு பெண்ணிடம் டிக்கெட் கொடுக்கப்போன கண்டக்டர், "என்னம்மா வாழவந்தியா...?" என்று கேட்க, "பின்ன, வாழவராமல், சாவதற்கா உன் பஸ்ஸில் ஏறினேன்" என்று கிலேடையால் அடித்தது அந்த கிராமத்துக்குயில்! கண்டக்டரே சிரித்து விட்டார்.

சேலம். நா.பிரசன்னலட்சுமி.

## சூப்பர் ஜீப்!

மேட்டூரிலிருந்து அடிக்கடி சேலம் போய் வருவோம். ஒரு முறை காய்கறிகள் வாங்கப்

போன போது, ஜீப் ஒன்று பிரேக் பிடிக்காமல் தாறுமாறாக ஓடி, காய்கறி, பழக் கடைகளை நாசம் பண்ணி விட்டது. "அடடா! ஏன் இந்த ஜீப் இப்படிப் போகிறது?" என்று நான் கேட்டபோது என் மகன், (சிறுவன்) "அது சினிமாவுல நடிச்சுப் பழகின ஜீப்பாக இருக்கும் அப்பா...! இந்த மார்க்கெட்டைப் பார்த்ததும் அதுக்கு 'ஃபைட் சீன்' ஞாபகம் வந்திருக்கும்..." என்று சொல்ல, சிரிப்போ சிரிப்பு!

## சேலத்தில் சீதா-ராமர்!

சேலம் பழைய பஸ் ஸ்டாண்டிலிருந்து திருச்சி போகும் சாலையில் உள்ளது பொய்மான்கரடு. இங்கே இரு பாறைகளுக்கு இடைப்பட்ட பகுதியைக் கீழிருந்து பார்த்தால் ஒரு வெளிறிய மான் உருவம் தெரியும். மேலேறிப் பார்த்தால் உருவம் மறைந்துவிடும்! இராமனும் சீதையும் வனவாசித்தபோது கண்ட மாயமான் மறைந்த இடமாம் இது! 'பொய்மான்கரடு' என்று அமரர் கல்கி ஒரு கதை எழுதியிருக்கிறார்.

சேலம் - 6, சண்முகசுந்தரம்.

## மூட்டைப் பூச்சி!

ஏ.சி.
தியேட்டரில்
ஓசி
ஊசி!

சந்தியூர், ஏ.கோவிந்தன்

## 'டிஸ்கவுன்ட் பால்'

இராசிபுரம் அண்ணாமலை வீட்டில் பசுமாடு உண்டு. ஒரு நாள் அவரிடம் பால் வாங்கப் போனேன். லிட்டர் எட்டு ரூபாய் சொன்னார். "மத்தவங்க ஆறு ரூபாய்க்குத் தராங்களே..." என்றேன். "நானும் அப்படித்தருவேன்" என்றார் அண்ணாமலை. "எட்டு ரூபாய்க்கா இருந்தா பால் கறந்ததும் குடுப்பேன். ஆறு ரூபாய்க்கா இருந்தால் வீட்டுக்குள்ளே போயிட்டு வந்து தருவேன்"

- அவர் சீரியஸாய்ச் சொன்னாலும் சிரிக்காமல் இருக்க முடியவில்லை!

இராசிபுரம்,. சி.காசிராமன்

## எந்தக் கண்?

அமெரிக்க எழுத்தாளர் மார்க் டுவேய்ன் ஒரு வங்கித் தலைவரிடம் போய் ஐயாயிரம் டாலர் கடன் கேட்டாராம். ஆபரேஷனாகி, ஒரு செயற்கைக் கண் பொருத்திக் கொண்டிருந்த அந்த அதிபர், "என் கண்களில் எது செயற்கை என்று கண்டுபிடித்தால் கடன் கொடுத்து விடுகிறேன்" என்று சீண்டியிருக்கிறார். உற்றுப் பார்த்துச் சரியாக விடை சொல்லி விட்டார் டுவேய்ன். "எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?" என்று அதிபர் கேட்க, டுவேய்ன் சொன்னார்: "ரொம்ப சுலபம்! அந்தக் கண்ணில் தான் சிறிதளவு கனிவு தென்படுகிறது!"

- 'உலகப் புகழ் பெற்ற எழுத்தாளர்கள்' நூலிலிருந்து.

சேலம் - 10, எம்.கே. சக்திவேல்

# சேலத்துச் சிரிப்பு



## 24. பொன்னன் பிரிவு

பொன்னன் அந்த அதல பாதாளமான அருவிக் குளத்தில் இறங்கிய அதே சமயத்தில், சிவனடியார் அருவியின் தாரைக்குப் பின்னாலிருந்து வெளிப்பட்டார். பொன்னனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. அவன் மேலே போகலாமா, வேண்டாமா என்று தயங்கி நின்ற போது, சிவனடியார் அவனைப் பார்த்து ஏதோ கூறியதுடன் சமிக்ஞையினால் "வா" என்று அழைத்தார். அருவியின் பேரோசையினால் அவர் சொன்னது என்னவென்று பொன்னன் காதில் விழவில்லை. ஆனால், சமிக்ஞை புரிந்தது. முன்னால் சுவாமியார் போன மாதிரியே இவனும் குளத்தின் ஓரமாகப் பாறைகளைப் பிடித்துக் கொண்டு தட்டுத் தடுமாறிச் சென்று அவர் நின்ற இடத்தை அடைந்தான். தூரத்தில் நின்று பார்த்த போது குறுகலாகத் தோன்றிய அருவியின் தாரை உண்மையில் முப்பது அடிக்குமேல் அகலமுள்ளது என்பதைப் பொன்னன் இப்போது கண்டான். சுவாமியார் அவனுடைய கையைப் பிடித்துப் பாறைச் சுவருக்கும் அருவியின் தாரைக்கும் நடுவில் இருந்த இடைவெளியில் அழைத்துச் சென்றார். இந்த இடைவெளி சுமார் ஐந்து அடி அகலமுள்ளதாயிருந்தது. மிகவும் மங்கலான வெளிச்சம்; கீழே பாறை வழுக்கல்; கொஞ்சம் கால் தவறினால் அருவியின் தாரையில் அகப்பட்டுக் கொண்டு, அந்த பாதாளக் குளத்திற்குள் போக வேண்டியதுதான்! ஆகவே இரண்டு பேரும் நிதானமாகக் காலை ஊன்றி வைத்து நடந்தார்கள்.

நாலைந்து அடி நடந்ததும் சிவனடியார் நின்று பாறைச் சுவரில் ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினார். அங்கே இட்டத்தட்ட வட்ட வடிமாக ஒரு பெரிய துவாரம் தெரிந்தது. அந்தத் துவாரம் சாய்வாக மேல் நோக்கிச் செல்வதாகத் தெரிந்தது. ஓர் ஆள் அதில் கஷ்டமில்லாமல் புகுந்து செல்லலாமென்று தோன்றியது.

ஆனால் அந்தத் துவாரம் எங்கே போகிறது? எவ்வளவு தூரம் போகிறது? - ஒன்றும் தெரியவில்லை. ஐந்தாறு அடிக்கு மேல் ஒரே இருட்டாகயிருந்தது.

சிவனடியார் பொன்னனுக்குச் சைகை காட்டித் தன்னைப் பின் தொடர்ந்து வரும் படி சொல்லிவிட்டு அந்தத் துவார வழியில் ஏறத் தொடங்கினார். சாய்வான மலைப் பாறையில் ஏறுவதுபோல கைகளையும் கால்களையும் உபயோகப்படுத்தி ஏறினார். பொன்னனும் அவரைத் தொடர்ந்து ஏறினான். இன்னதென்று தெரியாத பயத்தினால் அவனுடைய நெஞ்சு பட், பட் என்று அடித்துக் கொண்டது. சற்று ஏறியதும் ஒரே காரிருளாயிருந்தபடியால் அவனுடைய பீதி அதிகமாயிற்று. ஆனால், கையினால் பிடித்துக் கொள்ளவும், காலை ஊன்றிக் கொள்ளவும் சௌகரியமாக அங்கங்கே பாறை வெட்டப்பட்டிருப்பதாகத் தெரிந்தபோது, கொஞ்சம் தைரியம் உண்டாயிற்று. இவ்விதம் சிறிது நேரம் சென்ற பிறகு அந்தக் குகை வழியில் மேலேயிருந்து கொஞ்சம் வெளிச்சம் தெரிய ஆரம்பித்தது. பிறகு, வெளிச்சம் நன்றாய்த் தெரிந்தது. சிவனடியார் மேலே ஏறி அப்பால் நகர்ந்தார். பொன்னனும் அவரைத் தொடர்ந்து ஏறி, அடுத்த நிமிஷம்

# பார்த்திபன்

வெட்ட வெளியில் மலைப்பாறை மீது நின்றான். சுற்று முற்றும் பார்த்தான். ஆகா, அது என்ன அற்புதக் காட்சி!

மலை அருவி விழுந்த செங்குத்தான பாறையின் விளிம்பின் அருகில் அவர்கள் நின்றார்கள். அங்கே பாறையில் கிணறு மாதிரி வட்ட வடிவமாக ஒரு பள்ளம் இருந்தது. அந்தப் பள்ளத்தின் நடு மத்தியில்தான் குகை வழி ஆரம்பமாகிக் கீழே சென்றது. பள்ளத்துக்கு இடதுபுறத்தில் கொஞ்சம் தூரத்தில் அருவி 'சோ' என்று அலறிக் கொண்டு கீழே விழுந்தது. அருவி விழுந்த

திசைக்கு எதிர்ப்புறமாகப் பார்த்தால், கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. மூன்று பக்கமும் சுவர் வைத்தாற் போன்ற மலைத் தொடர்கள். நடுவில் விஸ்தாரமான சமவெளி. அந்தச் சமவெளியில் கண்ணுக் கெட்டிய தூரம் மஞ்சள் மலர்களால் மூடப்பட்ட காட்டுக் கொன்றை மரங்கள். எங்கே பார்த்தாலும் பூ! பொன்னிறப் பூ!

"பார்த்தாயா, பொன்னா! எப்பேர்ப்பட்ட அருமையான இடம்! இந்த இடத்தைக் கொண்டு போய்க் கடவுள் எவ்வளவு இரகசியமான இடத்தில் ஒளித்து வைத்திருக்கிறார், பார்த்தாயா?" என்றார் சிவனடியார்.

"ஆமாம், சுவாமி! எங்கள் பார்த்திப மகாராஜாவின் சித்திர மண்டபத்தைப் போல!" என்றான் பொன்னன்.

சிவனடியார் குறுநகை புரிந்தார்.

"ஆனால் பொன்னா! பகவான் இவ்வளவு அழகைச் சேர்த்து ஒளித்து வைத்திருக்கும் இந்த இடத்தில், மகா பயங்கரமான கோர கிருத்யங்கள் எல்லாம் நடக்கின்றன."

"ஐயோ! சுவாமி! ஏன் அவ்விதம் சொல்கிறீர்கள்?"

"ஆமாம்; வெகு நாளாய் நான் அறிய விரும்பியதை இப்போது அறிந்தேன். மகா கபால பைரவரின் இருப்பிடம் இந்த மலை சூழ்ந்த பள்ளத்தாக்கில்தான் எங்கேயோ இருக்கிறது. அதைக் கண்டுபிடித்து விட்டுத்தான் நான் இங்கிருந்து திரும்பி வருவேன், நீ...."

"நானுந்தான், சுவாமி! உங்களைத் தனியே விட்டு விட்டு நான் போய் விடுவேன் என்று நினைத்தீர்களா?"

"இல்லை பொன்னா! நீ போக வேண்டும். உனக்கு வேறு காரியம் இருக்கிறது. மிகவும் முக்கியமான காரியம்...."

"எங்கள் ராணியைக் கண்டு பிடிப்பதைக் காட்டிலும் முக்கியமான காரியம் என்ன சுவாமி?"

"அதற்குத்தானே நான் வந்திருக்கிறேன், பொன்னா! ஆனால் ராணியைக் காப்பாற்றினால் மட்டும் போதுமா? 'என் பிள்ளை எங்கே?' என்று அவர் கேட்டால் என்ன பதில் சொல்வது? இளவரசரும் இப்போது பெரிய அபாயத்தில்தான் இருக்கிறார். மாரப்பனுக்கும் மகா கபால பைரவருக்கும் நடந்த சம்பாஷணையை ஞாபகப்படுத்திக் கொள். மாரப்பனுக்கு ஒரு வேளை தெரிந்து போனால், அவன் என்ன செய்வானோ?"

"சக்கரவர்த்தித் திருக்குமாரியின் இஷ்டத்துக்கு விரோதமாய் என்ன நடந்து விடும், சுவாமி?"

"ஏன் நடக்காது? தேவியின் சகோதரன் மகேந்திரன் கூட உறையூரில் இல்லை, பொன்னா! மாரப்பன் இப்போது சக்கரவர்த்தி பதவிக்கல்லவா ஆசை கொண்டிருக்கிறான்? அவன் என்ன வேண்டுமானாலும் செய்வான். மேலும் குந்தவியே ஒருவேளை அவரைச் சோழநாட்டு இளவரசர் என்று தெரிந்து கொண்டு மாரப்பனிடம் ஒப்படைத்து விடலாமல்லவா?..."

அமரர் கல்கி

"ஐயோ!"

"அதனால்தான் நீ உடனே உறையூருக்குப் போக வேண்டும்."

"ஆனால், உங்களை விட்டு விட்டு எப்படிப் போவேன்? ஆ! அந்த மகா கபால பைரவர் உங்களைப் பலிக்குக் கொண்டு வரும்படி சொன்னதின் அர்த்தம் இப்போதுதான் தெரிகிறது."

"என்னைப் பற்றிக் கவலை வேண்டாம், பொன்னா! என் வாழ்நாளில் இதைப் போல எத்தனையோ அபாயங்களுக்கு ஆளாகியிருக்கிறேன். அந்தக் கபால பைரவனை நேருக்கு நேர் நான் தனியாகப் பார்க்கத்தான் விரும்புகிறேன். அவனைப் பற்றி நான் கொண்ட சந்தேகத்தை ருசுப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்!...."

"என்ன சந்தேகம், சுவாமி?"

"சமயம் வரும் போது உனக்குச் சொல்வேன், பொன்னா! இப்போது நீ உடனே வந்த வழியாகத் திரும்பிச் செல்ல வேண்டும். நேரே உறையூருக்குப் போக வேண்டும். இளவரசரைப் பற்றிச் சந்தேகம் தோன்றாமலிருந்தால், அவர் அங்கேயே இருக்கட்டும். ஏதாவது அபாயம் ஏற்படும் என்று தோன்றினால், அவரை ஜாக்கிரதையாக நீ அழைத்துக் கொண்டு மாமல்லபுரத்துக்கருகில் என்னை நீ சந்தித்த சிற்ப மண்டபத்துக்கு

வந்து சேர வேண்டும். அங்கே வந்து உங்களை நான் சந்திக்கிறேன்!"

"தாங்கள் வராவிட்டால்....?"

"அடுத்த பௌர்ணமி வரையில் பார். அதற்குள் நான் உறையூரிலாவது மாமல்லபுரத்துச் சிற்ப மண்டபத்திலாவது வந்து உங்களைச் சந்திக்காவிட்டால், நீ என்னைத் தேடிக் கொண்டு வரலாம்."

"அப்படியே சுவாமி!" என்று சொல்லிப் பொன்னன் சிவனடியாரிடம் பிரியாவிடை பெற்று அந்தத் துவாரத்துக்குள் இறங்கிச் சென்றான். கீழே வந்து அருவிக் குளத்தைத் தாண்டிக் கரையேறியதும் மேலே ஏறிட்டுப் பார்த்தான். அருவிப் பாறையின் விளிம்பில் சிவனடியார் நின்று பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது. பொன்னன் அவரை நோக்கிக் கைகூப்பி நமஸ்கரிக்க, அவரும் கையை நீட்டி ஆசீர்வதித்தார். பிறகு பொன்னன் விரைவாக அருவி வழியில் கீழே இறங்கிச் செல்லலுற்றான்.

## 25. வள்ளி சொன்ன சேதி

வழியில் எவ்வித அபாயமும் இன்றிப் பொன்னன் உறையூர் போய்ச் சேர்ந்தான். முதலில் தன் அத்தை வீட்டில் விட்டு வந்த வள்ளியைப் பார்க்கச் சென்றான். வள்ளி இப்பொழுது பழைய குதூகல இயல்புள்ள வள்ளியாயில்லை. ரொம்பவும் துக்கத்தில் அடிபட்டு உள்ளமும் உடலும் குன்றிப் போயிருந்தாள். அவள் பக்தியும் மரியாதையும் வைத்திருந்த சோழ ராஜ குடும்பத்துக்கு ஒன்றன்பின் ஒன்றாய் நேர்ந்த விபத்துக்களெல்லாம் ஒரு புறமிருக்க, இப்போது கொஞ்ச நாளாய்ப் பொன்னனையும் பிரிந்



திருக்க நேர்ந்தபடியினால் அவன் அடியோடு உற்சாகம் இழந்திருந்தான். எனவே, பல தினங்களுக்குப் பிறகு பொன்னனைப் பார்த்ததும் அவளுடைய முகம் சிறிது மலர்ந்தது.

"வா! வா!" என்று சொல்லி அவனுடைய இரண்டு கைகளையும் பிடித்துக் கொண்டு, "இளவரசர் போனது போல் நீயும் எங்கே கப்பல் ஏறிப் போய்விட்டாயோ, அல்லது ஒருவேளை உன்னை யாராவது காளிக்குத் தான் பலிகொடுத்து விட்டார்களோ என்று பயந்து போனேன். தினம் காளியம்மன் கோயிலுக்குப் போய், 'என் உயிரை எடுத்துக் கொண்டு என் புருஷனைக் காப்பாற்று' என்று வேண்டிக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாய் வந்தாயே! என்ன சேதி கொண்டு வந்திருக்கிறாய்? நல்ல சேதி தானே?" என்று மூச்சு விடாமல் பேசினாள்.

"நல்ல சேதி, கெட்ட சேதி, கலப்படமான சேதி எல்லாம் கொண்டு வந்திருக்கிறேன். ஆனால் இப்போது சொல்ல முடியாது. பசி பிராணன் போகிறது, வள்ளி! உன் கையால் கம்பு அடை தின்று எவ்வளவு காலம் ஆகி விட்டது! அகப்பட்டபோது அகப்பட்டதைத் தின்று...."

"அப்படியெல்லாம் பட்டினி கிடந்ததினால்தான் இன்னும் ஒரு சுற்று அதிகமாய்ப்



## அருள்வாக்கு

சாதாரணமாக மனிதர்களுக்கும் பிராணிகளுக்கும் வயிற்றுக்கு ஆகாரம் கொடுத்தால் அப்போதைக்குப் பசி அடங்குகிறது. அடுத்த வேளைதான் மறுபடியும் பசி ஏற்படுகிறது. நெருப்புக்கு மட்டும் நாம் ஓர் ஆகாரத்தைப் போட்டால் அது அடங்குவதேயில்லை. இன்னும் அதிகமாகக் கொழுந்து விட்டு எரிகிறது. மேலும் பல பொருட்களைத் தகித்துக் கபளீகரம் செய்கிறது. நெருப்பு பிரகாசமயமாக இருந்தாலும் அது, தான் ஸ்பரிசித்து விட்டுச் செல்கிற பண்டங்களை எல்லாம் கன்னங்கரேல் என்று கறுப்பாக்கிக் கொண்டு போகிறது. இதனால் நெருப்புக்கு 'க்ருஷ்ணவர்த்மா' என்று ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. காமமும் இப்படிப்பட்ட 'க்ருஷ்ணவர்த்மா'தான். அது தியாக எரிகிறது; அதற்குப் பிரியமான வஸ்துவைக் கொடுப்பதால் பசி அடங்காமல் அதிகமாகிக் கொண்டே போகிறது; அது நம் மனசையே கறுப்பாக்கி விடுகிறது. ஓர் இச்சை பூர்த்தியாகிற போது தாற்காலிகமாக ஒரு மகிழ்ச்சி உண்டானாலும், பிற்பாடு அதையே மீண்டும் தேடி அலைந்து அமைதியையும் சந்தோஷத்தையும் குலைத்துக் கொண்டு அழுகையையும் கோபத்தையும் உண்டாக்கிக் கொள்கிறோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



பெருத்துவிட்டாயாக்கும். பாவம்! கவலை ஒரு பக்கம்; நீ என்ன செய்வாய்?" என்று பொன்னனை ஏற இறங்கப் பார்த்தாள்.

"அப்படியா சமாசாரம்? நான் பெருத்திருக்கிறேனா, என்ன? ஆனாலும் நீ ரொம்பவும் இளைத்திருக்கிறாய் வள்ளி! ரொம்பக் கவலைப்பட்டாயா, எனக்காக?" என்றான் பொன்னன்.

"ஆமாம்; ஆனால் என்னத்துக்காகக் கவலைப்பட்டோம் என்று இப்போது தோன்றுகிறது. அதெல்லாம் அப்புறம் ஆகட்டும். நீ போய்விட்டு வந்த சேதியை முதலில் சொல்லு. சொன்னால் நானும் ஒரு முக்கியமான சேதி வைத்திருக்கிறேன்" என்றாள்.

"சுருக்கமாகச் சொல்லுகிறேன். நமது விக்கிரம மகாராஜா தாய்நாட்டுக்குத் திரும்பி வந்திருக்கிறார்...."

"என்ன? என்ன? நிஜமாகத்தானா?" என்று சொல்லி ஆவலுடன் கேட்டாள்.

"ஆமாம்; நானே இந்தக் கண்களால் பார்த்துப் பேசினேன்—"

"இப்போது எங்கேயிருக்கிறார்.....?"

"அதுதான் சொல்ல மாட்டேன், இரகசியம்."

"சரி, அப்புறம் சொல்லு."

"ராணி உள்ள இடத்தைக் கிட்டத்தட்டக் கண்டு பிடித்தாகி விட்டது. இப்போது சிவனடியார் ராணியைத் தேடிக் கொண்டிருக்கிறார். இதற்குள் அவசியம் கண்டு பிடித்திருப்பார்."

"ஆகா! சிவனடியாரா?"

"வள்ளி! நீ பொல்லாத கள்ளி! சிவனடியார் யார் என்று என்னிடம் உண்மையைச் சொல்லாமல் ஏமாற்றினாயல்லவா? அவருடைய பொய் ஜடையைப் பிய்த்து எறிந்து அவர் யார் என்பதைக் கண்டுபிடித்து விட்டேன்!"

"நிஜமாகவா? யார் அவர்?" என்றாள் வள்ளி.

"யாரா? வேறு யார்? செத்துப் போனானே உன் பாட்டன் வீரபத்திர ஆச்சாரி, அவன்தான்!"

வள்ளி புன்னகையுடன், "இப்படியெல்லாம் சொன்னால் போதாது. நீ இங்கேயிருந்து கிளம்பின்றாயே, அதிலிருந்து ஒவ்வொன்றாய்ச் சொல்லு, ஒன்றுவிடாமல் சொல்ல வேண்டும்" என்றாள்.

"நீ அடுப்பை மூட்டு" என்றான் பொன்னன்.

வள்ளி அடுப்பை மூட்டிச் சமையல் வேலையைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பொன்னன் தான் போய் வந்த வர



## பெரியோருக்குச் செய்வது நமக்கே செய்வது மாதிரி!

பெரியோர்களுக்கு நாம் செய்கிற ஒவ்வொன்றும் திரும்பவும் நமக்கேதான் வந்து சேரும் என்பதற்கான ஒரு சின்ன உதாரணம் தான் இம்மாதம் 12-ம் தேதி நடக்கவிருக்கும் ஸ்ரீ காஞ்சி காமாட்சி அம்பாள் — ஸ்ரீ ஆதி சங்கரர் ஸ்வர்ணவிமான கும்பாபிஷேக நிகழ்ச்சி! எப்படி என்கிறீர்களா? அண்மையில் சித்தியடைந்த காஞ்சி மகாசுவாமிகளின் நூற்றாண்டு விழாவின் போது அவருக்குச் செய்த கனகாபிஷேகம் நினைவிருக்கிறதல்லவா? அதில் கிடைத்த 87 கிலோ தங்கத்தையும் காமாட்சி அம்பாளின் மூலஸ்தானத்திற்கும் ஆதிசங்கரர் விமானத்திற்கும் தங்கக் கவசம் போடவும் அம்பாளுக்கு ஸ்வர்ண சிம்ம வாகனம் செய்யவும் சொல்லியருளினார்கள். அதன்படிதான் ஸ்ரீ ஜெயேந்திர சுவாமிகளும் ஸ்ரீ விஜயேந்திர சுவாமிகளும் இத்திருப்பணிகளைச் செய்கிறார்கள்.

வாற்றையெல்லாம் விவரமாகக் கூறினான். கடைசியில், "நீ என்னமோ சேதி சொல்லப் போகிறேன் என்றாயே, அதைச் சொல்லு!" என்றான்.

வள்ளி சொன்னாள்: - "நாலு நாளைக்குள் மாரப்பன் இங்கே ஐந்து தடவை வந்து விட்டான். அவன்தான் இப்போது சோழ நாட்டின் சேனாபதியாம். அவனுடைய ஜம்பம் பொறுக்க முடியவில்லை. 'வஸந்த மாளிகையில் யாரோ ஒரு இரத்தின வியாபாரி வந்திருக்கிறானாமே? அவன் செண்பகத் தீவிலிருந்து வந்தவனாமே?' என்று என்னவெல்லாமோ கேட்டு என் வாயைப் பிடுங்கப் பார்த்தான். எனக்கு ஒன்றுமே தெரியாது என்று சாதித்து விட்டேன். அப்புறம் இங்கே அடிக்கடி வந்து, நீ திரும்பி வந்து விட்டாயா என்று விசாரித்து விட்டுப் போனான். இன்றைக்கும் கூட ஒருவேளை வந்தாலும் வருவான்."

இதைக் கேட்ட பொன்னன் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு, "வள்ளி! தாமதிப்பதற்கு நேரமில்லை. இன்று சாயங்காலமே நான் வஸந்தத் தீவுக்குப் போக வேண்டும். நம்முடைய குடிசையைப் பூட்டி வைத்திருக்கிறாயல்லவா! குடிசையில் படகு ஜாக்கிரதையாயிருக்கிறதல்லவா?" என்று கேட்டான்.

"இருக்கிறது. ஆனால் என்ன காரணத்தைச் சொல்லிக் கொண்டு தீவுக்குப் போவாய்?" என்றாள்.

"குந்தவி தேவி இங்கே வந்தால் நான் படகு செலுத்த வேண்டும் என்று முன்னமே சக்கரவர்த்தி தெரிவித்திருக்கிறார். அதற்காகக் கேட்டுப் போக வந்தேனென்று சொல்கிறேன்."

"ஆனால், சாமியார் இன்னும் எதற்காக

"நான் எத்தனை ஜென்மம் எடுத்தாலும் இவர்தான் எனக்குக் கணவரா வரணும்."

"அவர் மேல் அத்தனை பிரியமா?"

"போட வேண்டிய சண்டை அத்தனை பாக்கி இருக்கு!"

—சக்தி



இம்மாதிரி சங்கடங்களை எல்லாம் உண்டாக்கிக் கொண்டிருக்கிறார் என்றுதான் தெரியவில்லை. அவருடைய வேஷம் எப்போது நீங்குமோ?''

''நானும் இதையேதான் கேட்டேன். பார்த்திப மகாராஜாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகத்தான் இன்னமும் வேஷம் போடுவதாகச் சொல்கிறார்.''

**பி**றகு பொன்னனும் வள்ளியும் சீக்கிரத்திலேயே சாப்பாட்டை முடித்துக் கொண்டு, உறையூரிலிருந்து புறப்பட்டுக் காவேரி நதிப் பாதையில் சென்றார்கள். அவர்களுடைய குடிசையை அடைந்ததும், கதவைத் திறந்து, உள்ளே இருந்த படகை இரண்டு பேருமாகத் தூக்கிக் கொண்டு போய் நதியில் போட்டார்கள். பொன்னன், "பொழுது சாய்வதற்குள் திரும்பி வந்துவிடுவேன் வள்ளி, கவலைப்படாதே'' என்று சொல்லிவிட்டுப் படகைச் செலுத்தினான்.

பல தினங்களுக்குப் பிறகு மறுபடியும் காவேரியில் படகு விட்டது பொன்னனுக்கு மிகுந்த உற்சாகத்தையளித்தது. ஆனாலும் பார்த்திப மகாராஜாவின் காலத்தில் இராஜ குடும்பத்துக்குப் படகு செலுத்தியது நினைவுக்கு வந்து அவனுடைய கண்களைப் பனிக்கச் செய்தது. தீவிலே இளவரசரைப் பார்ப்போமா? அவருக்கு உடம்பு சௌகரியமாகி இருக்குமா? அவரைத் தனியாகப் பார்த்துப் பேச முடியுமா? - இவ்விதச் சிந்தனைகளில் ஆழ்ந்தவனாய்ப் படகு விட்டுக் கொண்டே போனவன் திடீரென்று கரைக்கு அருகே வந்து விட்டதைக் கவனித்தான். படகு வந்த இடம் தீவின் ஒரு மூலை. ஜனசஞ்சாரம் இல்லாத இடம். அந்த இடத்தில் படகைக் கட்டிவிட்டுத் தீவுக்குள் ஜாக்கிரதையாகப் போய் புலன் விசாரிப்பதென்று அவன் தீர்மானித்திருந்தான்.

மறுதடவை அவன் தீவின் கரைப்பக்கம் பார்த்தபோது அவனுடைய கண்களை நம்ப முடியவில்லை. அங்கே விக்கிரம மகாராஜாவே நின்று கொண்டிருந்தார். ஒரு கால் தண்ணீரிலும் ஒரு கால் கரையிலுமாக நின்று படகையும் பொன்னனையும் ஆவலுடன் நோக்கிக் கொண்டிருந்தார்.

(தொடரும்)



## இயங்கும் வாழ்க்கைக்கு இலக்கணம்

**த**வறு செய்வது
தவறல்ல...
திருத்திக் கொள்ளக் கூடிய
தவறுகள்
சரியானவற்றுக்குச் சமமானவையே!

சரிகளே
சரிகளைக் கர்ப்பம் தரிக்கும்
என்பதில்லை.
தவறுகளும் சரிகளைப்
பிரசவம் செய்யும்.

தாமதமாகும்
சரிகளே தவறுகளாயிருக்கலாம்.

சரியானதைச் செய்யக்
காலம் பார்த்துக் காலம் பார்த்துக்
காலமாவதைவிட
ஏதாவது செய்ய எத்தனித்து – அது
தப்பாய் முடிந்தால் தப்பேஇல்லை!

பழுதே இல்லாதவை
பழுத்து விடுவதில்லை எடுத்த எடுப்பில்...
எனவே
பழுதுகளைச் செய்து
பழுது பார்த்துக் கொண்டிருப்பது
இயங்கும் வாழ்க்கைக்கு
இலக்கணம்.

– தமிழன்பன்

# தேவைகள் என்பவை சொல்லிக்கொண்டு வருவதில்லை. ஆகவே...



தென்னை:
வலிமை, பல்வேறு உபயோகம் நிறைவான பலன் ஆகியவற்றின் சின்னம்.

இன்றே பணத்தைச் சேமிப்பது அவசியம். திடுமென எந்த நேரத்திலும் உங்களுக்குப் பணத்தேவை ஏற்படக்கூடும். சட்டென்று உடனே அந்தத் தேவையைப் பூர்த்தி செய்ய இயலாமல் போய்விடலாம். குழந்தையின் உயர்கல்வி, திருமணம், சொந்தத்தில் வீடு, வாகனம் இப்படி எந்தவொரு காரணத்துக்காகவும் பணத்தேவை ஏற்பட்டால் அதனைச் சிரமமின்றிச் சமாளிப்பது எப்படி? உங்களுக்கு அவசியப்படும் நேரத்தில் நல்ல லாபத்துடன் திரும்பக் கிடைக்கும் விதத்தில் இன்றே புத்திசாலித்தனமாக முதலீடு செய்து வைப்பதுதான் அதற்குச் சரியான வழி.

சேமிக்க வேண்டும் என முடிவு செய்து விட்டால் மட்டும் போதுமா? நீங்கள் முதலீடு செய்யப்போகும் நிறுவனம் எப்படிப் பட்டது என்பதைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டாமா?

எந்தவொரு நிறுவனத்திலும் முதலீடு செய்வதற்கு முன் பின்வரும் மூன்று அம்சங்களும் அதில் இடம் பெற்றிருக்கின்றனவா என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

- உங்கள் பணத்துக்குப் பாதுகாப்பு
- அதனை எளிதில் திரும்பப்பெறும் நிதி வசதி
- பண்புடன் கூடிய சேவை

பொதுமக்கள் நலனைக் கருத்தில் கொண்டு வெளியிடப்பெறுவது.



Ram Kaashyap
Investment Ltd

பதிவு அலுவலகம்: 53, பிஷப் கார்டன்,
(கிரீன்வேஸ் ரோடுக்கு அப்பால்)
சென்னை - 600 028 போன்: 4936931, 4936932

உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு

# உங்கள் நிம்மதியை உறுதிசெய்வதில் எங்கள் பங்காக நாங்கள் அளிப்பது உங்கள் பணத்திற்கு பாதுகாப்பு



தேங்காய்:
உள்ளே சுவை மிகுந்த சத்து. வெளியே உறுதியான மூடி.

ராம் காஷ்யப் இன்வெஸ்ட்மெண்ட் லிமிடெட். நம்பகத்தன்மை, பண்பாடு, தொலைநோக்கு ஆகியவை இந்நிறுவனத்தின் அடிப்படைப் பண்புகள். நிதித்துறையில் அனுபவம் நிறைந்த நிபுணர்களும் வர்த்தகர்களும் இணைந்து இதனைத் தொடங்கியுள்ளனர். குடும்பத்துக்குத் தேவைப்படும் எலெக்ட்ரானிக் சாதனங்கள், ஃபர்னிச்சர்கள், கம்ப்யூட்டர்கள் ஆகியவற்றையும், கார்கள், லாரிகள் போன்ற வாகனங்களையும், வாங்க உதவும் லீசிங், தவணை முறை நிதியுதவி ஆகிய வழிமுறைகளில் ஈடுபட்டுள்ள நிறுவனம். சாமான்யரும் கூட சுலபமாகச் சிறந்த பொருள்களை வாங்கித் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ள உதவுவது இந் நிறுவனத்தின் முக்கிய நோக்கம். இதன் ஆண்டு வணிகம் 1996 மார்ச் முடிவில் ரூ.30 கோடியாகவும், இந்நூற்றாண்டின் முடிவில் ரூ.500 கோடியாகவும் இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

**11,000 பங்குதாரர்களின் நம்பிக்கையைப் பெற்றுள்ள நிறுவனம் ராம் காஷ்யப்.** நிதியுதவி வழிமுறைகளில் நிறைந்த அனுபவம் பெற்றவர்களால் லாபகரமான முறையில் நிர்வகிக்கப்படுகிறது. ரிசர்வ் வங்கியின் விதிமுறைகள் உள்ளபடியே பின்பற்றப்படுகின்றன. வீடியோகான் லீசிங் & இண்டஸ்ட்ரியல் ஃபைனான்ஸ் லிமிடெட் நிறுவனத்தின் ஈக்விடி பங்கேற்பு மற்றும் பல முன்னணி நிதி நிறுவனங்களின் ஆதரவைப் பெற்றிருப்பதால் பக்க பலத்துக்குக் குறைவில்லை.

**பணத்தை முதலீடு செய்வதில் மிகுந்த கவனம் செலுத்துவதோடு, அளிக்கும் நிதியுதவியைத் திரும்பப் பெறுவதில் ஒரு சிறப்பான நிலையை அடையவும் முடிகிறது.** இவையனைத்தும் மிகுந்த நம்பகத்தன்மையோடு ஒன்று சேர்ந்து உங்கள் டெபாசிட் தொகைகளுக்கு அதிகபட்சப் பாதுகாப்பை அளிப்பது நிச்சயம்.

---

**வீடியோகான் லீசிங் & இண்டஸ்ட்ரியல் ஃபைனான்ஸ் லிமிடெட் நிறுவனத்தின் ஈக்விடி பங்கேற்புடன்**

---



**Ram Kaashyap Investment Ltd**

நிர்வாக அலுவலகம்: 5-D, மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004.
போன்: 4994303, 4995148

**கிளைகள்:**

**தஞ்சாவூர்:** ராமலிங்க பத்தர் பில்டிங், 2681/72, தெற்கு மெயின் ரோடு, தஞ்சாவூர்-613 009. போன்: 23331.
**கோயம்புத்தூர்:** ஏசியாடிக் பில்டிங், 2-வது மாடி, (விஜிபி ஷோரூம் அருகில்) 378, டாக்டர் நஞ்சப்பா ரோடு, கோயம்புத்தூர் - 641 018.
**திருச்சிராப்பள்ளி:** வைகறை, முதல் மாடி, தலைமை தபால் அலுவலகம் எதிரில், பாரதியார் சாலை, திருச்சிராப்பள்ளி - 620 001. போன்: 461137 P.P.
**மதுரை:** 41, மஹா காம்ப்ளெக்ஸ், 48, தானப்ப முதலி தெரு, மதுரை - 625 001.
**ஹைதராபாத்:** 5-9-47/3, பஷீர்பாக், ஹைதராபாத் - 500 029. போன்: 232962.
**சித்தூர்:** 18/747, ஹைரோடு, பாங்க் ஆஃப் இந்தியா எதிரில், சித்தூர் - 517 001. போன்: 22044, 25788.

---

## டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன. எங்களுடன் இணைந்து வளம் பெறுங்கள்

---

உலகக் கண்ணோட்டம்; தனி மனித மேம்பாடு

சட்டபூர்வமான ஃபிக்சட் டெபாசிட் விளம்பரம் 30.5.95 தேதியிட்ட ஹிந்து நாளிதழில் வெளியிடப்பட்டுள்ளது.

# சாட்டிலைட் திருமணம்



## புத்தம் புது பசை!

"எலும்பை முறிச்சுடுவேன்" என்று வாத்தியார் திட்டினால், "நான் பசை வாங்கி ஒட்டிக்குவேன்..." என்று மாணவன் எதிர்த்துப் பேசும் காலம் சீக்கிரமே வந்துவிடும் போலிருக்கிறது!

கலிபோர்னியா டாக்டர்கள் இதற்கென்றே ஒரு பசை கண்டு பிடித்திருக்கிறார்கள். உடைந்துபோன எலும்புப் பகுதியில் ஊசி மூலம் இந்தப் பசையைச் செலுத்தினால், பத்து நிமிடங்களுக்குள் அது அப்படியே இறுகிப் போய் விடுகிறது. எலும்பு ஒட்டப்பட்டு பழைய, இயற்கை எலும்பைப் போல் வலிமை அடைகிறது.

எஸ்.ஆர்.எஸ். என்று பெயரிடப்பட்டுள்ள இந்தப் பசை, நமது எலும்பில் உள்ள கால்ஷியம் போன்ற இயற்கைப் பொருட்களைக் கொண்டே தயாரிக்கப்படுகிறது.

அமெரிக்காவின் ஒரு டஜன் மருத்துவ மனைகள் இந்த சிகிச்சை முறையைப் பரிசோதனை முயற்சியாகப் பயன்படுத்த ஆரம்பித்துள்ளன. சில ஐரோப்பிய நாடுகளிலும் இது எட்டிப் (ஒட்டிப்?) பார்க்க ஆரம்பித்துள்ளது.

இந்த முறையினால் பெரும்பாலான எலும்பு ஆபரேஷன்கள் - தகடு பொருத்துதல்; ஸ்க்ரு வைத்து முடுக்குதல் - போன்றவற்றைத் தவிர்த்துவிடலாம் என்கிறார்கள். அப்புறம் என்ன.... செலவு, நேரம், சிரமம் யாவும் மிச்சம்தான்!

இன்னும் இரண்டு வருடங்களில் அமெரிக்கா முழுவதிலும் எஸ்.ஆர்.எஸ். விற்பனைக்கு வரும் என்று நம்பப்படுகிறது.

*நன்றி : அமெரிக்கத் தகவல் நிலையம்*

## வாழ்க விண்வெளி!

ரிமோட் கன்ட்ரோல் முறையில் கல்யாணம் செய்து கொண்டிருக்கின்றனர் ஒரு ராணுவ தம்பதி. இதுவும் அமெரிக்காவில். ரெனி ஒரு பிரிவிலும் பென்ஜமின் இன்னொரு பிரிவிலும் ராணுவப் பணியில் இருந்தனர். உயர் அதிகாரிகள் ஆசியுடன் சிறப்பு சாடிலைட் லிங்க் பெற்று, டி.வி. திரைகள் மூலம் மணமகனும் மணமகளும் சந்தித்துக் கொள்ள, திருமணச் சடங்கு நடந்து முடிந்தது. மணமகன் சார்பில் ஓர் அதிகாரி ரெனிக்கு மோதிரம் அணிவித்தார். பென்ஜமின், சாடிலைட் வழியே ஒரு 'ஃப்ளையிங் கிஸ்' அனுப்ப அதை வெட்கத்துடன் பெற்றுக் கொண்ட ரெனி தாமும் ஒரு முத்தத்தை அதே ரூட்டில் அனுப்பினார்!

*தகவல் : மௌஷ்மி*

## ஹலோ, நண்பரே!

எதிர்ப்பக்கத்தில், பார்த்தால் அப்பிராணிகளாகத் தெரிகின்ற இந்தப் பறவைகள்தான் கோட்டான்கள். காயிதே மில்லத் மாவட்டம் மன்னம்பந் தலில் உள்ள ஏ.வி.சி. கல்லூரியில் இப்பறவைகள் பற்றிய தீவிர ஆய்வு மேற்கொள் ளப்பட்டுள்ளது.

காரணம், நெற்களஞ்சியமான தஞ்சை காயிதே மில்லத் விவசாயிகளின் முக்கிய எதிரி : எலிகள்; எலிகளின் முக்கிய எதிரி கோட்டான்கள். எனவே எதிரியின் எதிரியான நண்பனை ஊக்குவித்து, அந்த இனத்தின் பெருக்கத்துக்குச் செய்யக் கூடியவை என்னென்ன என்று ஆராய்ந்து வருகிறார்கள். இந்திய விவசாய ஆய்வுக் கழகம் (ICAR) இதற்கு நிதியுதவி செய்துள்ளது.

**அசத்தும் விஞ்ஞானம்**

1992 இலேயே தொடங்கிய ஆய்வின் படி கிடைத்துள்ள சில தகவல்கள்:

எலிகளினால் நெற்பயிருக்கு ஆகும் சேதம் 40 முதல் 50 கோடி ரூபாய் வரை இருக்கும். கரும்பு, சோயா, உளுந்து பயறு போன்ற பயிர்களும் அவற்றால் நாசம்! ஒரு மனிதன் ஒரு நாளில் உண்ணக் கூடிய உணவை மூன்று ஜோடி எலிகள் (அதே ஒரு நாளில்) ஏப்பம் விட்டு விடும். மேலும், எலிகளினால் இருபது வகையான உயிர்க்கொல்லி நோய்கள் பரவுகின்றன.



• கோட்டான் ஜோடி

எலி மருந்துகளை உபயோகித்தாலோ சுற்றுப்புறச் சூழல் மாசுபடுகிறது. எலிகளை அழிக்கும் மற்ற முறைகளுக்கு (புகை போடுதல், கிட்டி வைத்தல்) நிறைய செலவு பிடிக்கும். எனவேதான் கோட்டான்களிடம் கவனம் திரும்பியுள்ளது.

பொன்னிற உடலில் சுங்கடி புடைவை போல் புள்ளியுடைய ஒரு கோட்டான் ஓரிரவில் மூன்று முதல் ஆறு எலிகளை உணவாக்கிக் கொள்ளும். வயல் எலி, வரப்பு எலி, புல் எலி, வீட்டு எலி என வித்தியாசம் பாராமல் எல்லாவற்றையும் விருந்தாக்கிக் கொள்ளும்.

கூகை என்ற தமிழ்ப் பெயரும் barn owl (barn - நெற்களஞ்சியம்) என்ற ஆங்கில 'நேமு'ம் உள்ள இந்தக் கோட்டான்கள் குஞ்சு பொரிக்கும் காலத்தில் குடும்பம் முழுமைக்கும் சேர்த்து வேட்டையாடுவதால் அழியும் எலிகளின் எண்ணிக்கை பல மடங்கு உயரும்.

கோட்டான்களின் பயங்கர அலறல் ஏற்படுத்தும் பயமும் மூட நம்பிக்கையும் அவை மனிதனால் வேட்டையாடப்படக் காரணமாயிருந்தன. இப்போது விவசாயிகள் அவற்றை நண்பர்களாக ஏற்றுக் கொண்டு விட்டார்கள்.

இனி இரவில் கோட்டான்கள் அலறினால் பயத்தை ஒதுக்கி வைத்து விட்டு 'வாழ்க!' சொல்ல வேண்டியது தான்!

— டாக்டர் இரா. கனகசபை

பயிர் பாதுகாப்புக்கு இயற்கை உதவியை ஒரு பக்கம் நாடுகிறோம். இன்னொரு பக்கம் செயற்கை உதவியும் மனிதனுக்குத் தேவைப்படுகிறது



• வயல்களில் இப்படி 'T' வடிவ கம்பம் நட்டு கோட்டான்களுக்கு உதவலாம். ஆனால் கதிர் முற்றும் போது நீக்கிவிட வேண்டும். அப்போதுதான் மற்ற பறவைகள் வந்து பயிர்ச் சேதம் விளைவிக்காது.

ரோபோக்கள் உருவத்தில். உலக ரோபோக்களில் சுமார் எழுபது சதவிகிதம் ஜப்பானில் தான் உற்பத்தியாகின்றன.

பார்வை இழந்தவர்களுக்கு வழிகாட்டும் ரோபோ, மனித உருவங்களை அப்படியே வரையும் ரோபோ, டீ தயாரித்துத் தரும் ரோபோ என்று உருவாக்கிக் கொண்டே போகிறார்கள். அடுத்த நூற்றாண்டில் ரோபோக்கள் செய்யப்போகும் சில காரியங்கள் :

- அணு ஆராய்ச்சிக் கூடங்களில் வெளிப்படும் நச்சுப் பொருள்களைப் பாதுகாப்பாக வெளியேற்றுதல்.
- மருத்துவமனைகள் மற்றும் முதியோர் இல்லங்களில் உதவியாளர், நர்ஸுகளுக்குப் பதில் 'பணி'யாற்றுதல்.
- பூகம்பம், வெள்ளம், புயல் போன்றவற்றால் சேதம் ஏற்படும்போது 'ஸ்பாட்டு'க்கே போய், சிக்கிக் கொண்டவர்களுக்கு உதவுதல்.
- கடலுக்கடியிலும் விண்வெளியிலும் ஆராய்ச்சிகள் செய்தல், கட்டுமானங்கள் அமைத்தல்.
- விவசாயப் பணிகள், கனிம அகழ்வு, அபாயகரமான கட்டடப் பணிகள், பளு தூக்குதல், தீயணைப்பு ஆகியவற்றைச் செய்தல்!

நம் பேரன் பேத்திகள் பாடு கொண்டாட்டமா அல்லது (வேலையில்லா) திண்டாட்டமா?....

நன்றி : **ஜப்பான் காலிங்**

# என்னுயிரும் நீயல்லவோ

10

அப்பாவின் ஆபீஸ் அறை வாசலிலிருந்து நேரே பத்தடியில் நாற்காலி-மேஜை இருந்தது. அந்தச் சுழல் நாற்காலியிலிருந்து வலப்பக்கம் பத்தடியில் சுவர். வலப்பக்க மூலையிலிருந்து நேரெதிரே போனால் அங்கு ஒரு கோத்ரெஜ் பீரோ. பீரோவைத் திறந்து வெளியே கிடந்த ஃபைல்களை உள்ளே வைத்து விட்டு அந்த கோத்ரெஜ் கண்ணாடி மேஜையில் சொருகியிருக்கும் படங்களை எடுத்து விடலாம் என்று சுழல் நாற்காலிக்கு வந்த போது சுழல் நாற்காலியிலிருந்து கோத்ரெஜ் பீரோ கதவு திறந்திருப்பது தெரிந்தது. அந்த கோத்ரெஜ் பீரோவின் வலப்பக்கக் கதவில் ஒரு கண்ணாடி இருந்தது. கதவு ஒருக்களித்து திறந்திருந்ததால் சுழல் நாற்காலியில் உட்கார்ந்திருப்பது கண்ணாடியில் தெரிந்தது.

சுழல் நாற்காலியைச் சற்று பின்னுக்கு நகர்த்தி கண்ணாடியின் நடுவே தன்னை நிறுத்தி கதிரேசன் தன்னை இரண்டு மூன்று கோணங்களில் கைமாற்றி கால் மாற்றி அழகு பார்த்துக் கொண்டான்.

"ஹலோ" என்று அவனைப் பார்த்தே கையசைத்தான்.

"என்ன?" என்று தன்னைப் பார்த்தே கேட்டுக் கொண்டான்.

"தேங்க்யூ" சம்பந்தமில்லாமல் சிரித்தான்.

"ஐயம் கதிரேசு. கார்டமம் கதிரேசு... எனக்குப் பெரிய எஸ்டேட் இருக்கு. நீங்க என்ன பண்றீங்க" தன்னைப் பார்த்தே கேட்டான்.

நேரம் போவதே தெரியாமல் சுழல் நாற்காலியில் இருந்தபடியே ஒருக்களித்த கண்ணாடியில் தன்னைப் பல்வேறு கோணங்களில் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

மனிதர்கள் கண்ணாடியிடம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். கண்ணாடி கண் வழியே செல்லும் ஒரு போதை விஷயம். ரத்தத்தில் கலக்காமல் நேரே புத்திக்குப் போய் விடும் சுகமான மயக்கம். கண்ணாடியை அலட்சியப்படுத்தத் தெரியவில்லையெனில் வாழ்நாளில் குறிப்பிடத்தக்க நேரம் வீணாகும். கண்ணாடி அகம்பாவம் வளர்க்கும். தோல் அழகே அழகு என்பது புரியாமல் போகும்.

பன்னிரண்டரை லட்சம் காசும் அந்த ஆபீஸ் அறையின் தனிமையும் அந்த சுழல் நாற்காலியும் எதிரே உள்ள கண்ணாடியும் கண்ணாடியில் தெரிந்த அவன் சுருள் முடியும் கனத்த மீசையும் அவனுக்கு ஒரு கிறக்கத்தைக் கொடுத்தன. அப்பாவின் காரில் எஸ்டேட்டுக்குக் கிளம்புகிற வரை அவன் இடைவிடாது கண்ணாடியில் தன் அழகை ரசித்துக் கொண்டிருந்தான். வெகு நேரம் கண்ணாடியில் பல்வேறு கோணங்களில் தன்னைப் பார்த்துப் பார்த்துப் பதியவைத்துக் கொண்டதால் கண்ணாடி இல்லாத போதும் தான் நிற்பதும் நடப்பதும் சிரிப்பதும் எப்படி இருக்கும் என்பதை அவனால் கற்பனை செய்ய முடிந்தது.

தன்னுடைய உருவத்தை எதிர்பார்வையாய் கற்பனை செய்தபடியே கதிரேசன் கார் ஓட்டினான். பாதி தூரம் போகையில் பலத்த மழை பிடித்துக் கொண்டது. மிகவும் கனத்து அடர்த்தியாய் எதிர்ப்பக்கம் ஆள் வருவதே தெரியாதபடி பெய்யத் துவங்கியது. வண்டியைப் பாதையிலிருந்து விலக்கி ஓரம் நிறுத்திவைத்துவிட்டு கண்ணாடிகள் ஏற்றி உட்கார்ந்து கொண்டான். காருக்குள் இருக்கும் கண்ணாடியில் கண்கள் மட்டுமே தெரிந்தன. மேகம் இருட்டிக் கொண்டு வர அந்தக் கண்ணும் தெரியாமல் இருளில் மூழ்கியது.

சொர்ணலட்சுமி பஸ் ஏறுகிற போது மதுரையில் கன்னென்று வெயிலடித்தது. எஸ்டேட்டுக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டு, முன்பக்கத்தில் டிரைவருக்கு இணை



யாய் உள்ள இடப் பக்க ஒற்றைச் சீட்டில் உட்கார்ந்து கொண்டான். ஒரு மலைப் பிரதேசத்துக்கு போகையில் அந்த மாதிரி ஒரு இடத்தில் உட்காருவது வசதியானது. மலைப் பிரதேசத்தின் இடதும் வலதும் ரசித்துக் கொண்டு போகலாம். நெட்டுக்குத்தாய் மேலேறிப் போகின்ற அல்லது சரிகின்ற ஒரு சந்தோஷத்தை வேறு எந்த சீட்டிலிருந்தும் அனுபவிக்க முடியாது. ஆனால் அந்த சீட்டின் முதுகில் கண்டக்டர் என்று போட்டிருந்தது. அந்த சீட்டில் உட்கார வேண்டும் என்று ஆசைப்பட்ட ஆள் அதைச் சுட்டிக் காட்டினான்.

"கண்டக்டர் வந்தா நான் சொல்லிக் கறேன்" - சொர்ணலட்சுமி அவனை அலட்சியப்படுத்தினாள்.

"யார் என்ன சொன்னாலும் இந்த சீட்ல உட்கார வுட மாட்டாங்க" - அந்த ஆள் பயமுறுத்தினான்.

சொர்ணலட்சுமி அவனுக்குப் பதில் சொல்லாது அலட்சியப்படுத்தினாள்.

"வர வர பொண்ணுங்களுக்கு உடம்பு வளர்ற அளவுக்கு மூளை வளரலை. மலை ஏறுகிற போது இஞ்சின் சூடாகும். இஞ்சின் சூடானால் சீட் சூடாகும். சீட் சூடானால் உடம்பு சூடாவும்னு தெரியலை" என்று மனத்தில் நினைத்துக் கொண்டான். ஒரு ஆற்றாமையில் அவளையே உற்றுப் பார்த்தான். எந்தக் கோணத்தில் பார்த்தாலும் ஒரு தெறித்து விழுகிற அழகு அவளிடமிருந்து வெளிவந்தது. பஸ் கிளம்பி மதுரையின் எல்லையைத் தாண்டியது. அல்லி நகரம், போடிநாயக்கனூர் என்று பறந்தது. அதுவரை ஏறி இறங்கும் ஜனங்கள் அதிகமாக இருந்தார்கள். போடிநாயக்கனூர் தாண்டி மலைகள் நோக்கி பஸ் போக, கண்டக்டர் முன்பக்கம் வந்தார்.

"அம்மா... அது என் சீட்டு."

"நான் அப்பமே சொன்னேன். அது கண்டக்டர் சீட்டு, உட்காராதீங் கன்னு. நான் சொல் விக்கறேன்

பாலகுமாரன்



"இந்த மாத்திரையை ஒரு நாளைக்கு மூணு வேளை சாப்பிடணும்."

"பட்டினிக்கு முன்னாடியா? பின்னாடியா டாக்டர்?"

- சக்தி

கண்டக்டர்கிட்டன்னு திரும்பிக்கிட்டாங்க."

பின்னால் உட்கார்ந்திருந்த அந்த நடுத்தர வயது ஆள் உரத்த குரலில் புகார் சொன்னான். புகாரில் ஆற்றாமை தெரிந்தது.

மருண்ட விழிகளோடு சொர்ணலட்சுமி கண்டக்டரை நோக்கினாள்.

"அவங்க பாட்டுக்கு இருக்கட்டும். ஏன் தொந்தரவு பண்றே..." டிரைவர் சொர்ணலட்சுமிக்குப் பரிந்து வந்தார்.

இந்த மாதிரி ஒரு அழகான பயணியை இவ்வளவு அருகே வைத்துக் கொண்டு ஓட்டுவது எப்போதேனும் ஒருமுறைதான் நடக்கும். அதை இழக்க அந்த டிரைவர் விரும்பவில்லை.

"இந்த சீட் ரொம்ப சூடுண்ணே. மலை ஏறப்ப இஞ்சின் சூடாகும். இஞ்சின் சூடாறப்ப இந்தப் பக்கம்தான் வெக்கையடிக்கும்."

"நான் அதையும் சொன்னேன். கேட்கலை" அந்த நடுத்தர வயது ஆள் உற்சாகமாய் தன் அபிப்பிராயம் தெரிவித்தான்.

சொர்ணலட்சுமியை எப்படியாவது அப்புறப்படுத்தும் ஆத்திரம் அதில் தெரிந்தது.

"யோவ் நீ எந்திரி... மொதல்ல நீ எந்திரி சொல்றேன்" அந்த டிரைவர் அவன் இடையூறு பொறுக்காமல் கூச்சல் போட்டார்.

"ஏன்... நான் ஏன் எந்திரிக்கோணும்?"

"கன்னியப்பா... இந்த சொறித்தலையன் தூங்கிக்கிட்டே வரான். அவனை எடுத்துப் பின்னாடி போடு" கோபமாய் கட்டளையிட்டார்.

"நான் எங்க தூங்கினேன்..." அந்த ஆள் சிணுங்க,

கன்னியப்பன் டிரைவரை 'என்ன' என்பது போல் பார்த்தான்.

"அந்தக் குட்டி டக்கர்... அவனை எழுப்பிட்டு நீ உட்காரு" யாரும் அறியாதவாறு டிரைவர் கண்டக்டருக்கு கண்ணால், கைவிரல்களால், அர்த்தம் பொதிந்த புன்னகையால் விளக்கினான்.

கண்டக்டர் அந்த நடுத்தர வயது ஆளின் முதுகைத் தட்டி எழுந்து நிற்க வைத்து, பின் பக்கம் கைகாட்டி அவனிருந்த சீட்டில் கம்பீரமாய் உட்கார்ந்து கொண்டான். டிக்கட் நம்பரை சிறு பேடில் எழுதியபடியே ஓரக் கண்ணால் சொர்ணலட்சுமியைப் பார்த்தான்.

"சட்டை புதுசாண்ணே... இத்தினி நேரம் பாக்காத வுட்டுட்டேன். முன்னியே சொல்லிருக்கக் கூடாதா..." ஆனந்தமான சங்கேத மொழியில் குதூகலித்தான்.

"பழசா இருந்தா என்ன... புதுசா இருந்தா என்ன.. பாக்க நல்லா இருக்கா... அதான் முக்கியம்."

சொர்ணலட்சுமிக்கு அவர்கள் பேசிக்கொள்வது புரியவில்லை. அந்த ஆளுக்குப் புரிந்தது. அந்த ஆளுக்கு அந்த டிரைவரைப் பிடிக்காது போயிற்று. அந்த கண்டக்டரைப் பிடிக்காது போயிற்று. ஒரு மாதிரி உட்கார்ந்திருக்கும் சொர்ணலட்சுமியைப் பிடிக்காது போயிற்று.

"எங்க ஆத்தா போறீங்க... போடி மெட்டுக்கா?" டிரைவர் சொர்ணலட்சுமியைப் பார்த்துப் பொய்யான கனிவுடன் கேட்டான்.

அவள் ஆமென்று தலையசைத்தாள்.

"போடிமெட்டுல எங்கெங்கே போறீங்க?" கண்டக்டர் முன்பக்கம் எட்டிப் பார்த்து விசாரித்தான்.

அவள் எஸ்டேட் பெயர் சொன்னாள்.

"அட.... நம்ம நாச்சியப்பன் செட்டியார் எஸ்டேட்டு. அல்லிநகரத்துலதான் நம்மனைத் தாண்டி செட்டியார் போனாரு."

"அவரு இருக்காதுங்க" சொர்ணலட்சுமி பதில் சொன்னாள்.

"நான் வண்டி நம்பர் பார்த்தேன். கலர் பார்த்தேன். அவரு இல்லேன்றீங்களே."

"நாச்சியப்பன் செத்துட்டாருங்க."

"என்னா..." அந்த பஸ் ஒருமுறை இடதும் வலதும் ஆடி நேராயிற்று.

நாச்சியப்பன் செத்துட்டாரா... கண்டக்டரும் எழுந்தான்.

எப்போ... எப்படி... என்று அவளிடம் விவரம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நாச்சியப்பன் இறந்து போனது வியப்பும் வேதனையுமான தகவலாக இருந்தது. ஆனால் அதையும் மீறி சொர்ணலட்சுமியின் அழகு அவர்களை சந்தோஷப்பட வைத்தது.

"அப்ப வண்டி போச்சுதே... யார் வண்டி அது...?"

யாரான டிரைவர் ஓட்டிட்டு போறானோ...

"நீ என்ன வேணும் செட்டியாருக்கு?"

"பகவதி எங்க அக்கா..."

"யாரு பகவதி... செட்டியார் வச்சிருந்



"திருடிட்டு ஓடின நாலு பேரில் ஒருவரைத் துரத்திப் பிடிச்சிட்டு வந்துட்டேன் சார்."

"மெச்சிக்க! நீ பிடிச்சிட்டு வந்திருக்கிறது மப்டியில நின்ன நம்ம ஆளுய்யா!"

— நியூபாம்பே ஜான்

தாரே அந்தம்மாவா..."

"டக்குன்னு அப்படி பேசாத கன்னியப்பா.. அது ரொம்ப மரியாதைப்பட்ட அம்மா. செட்டியாரு ரொம்ப மரியாதையா வச்சிருந்தாரு. அத்தனி பெரிய எஸ்டேட்டை' அந்தம்மா தனியா நின்னு பாத்துக்குது. பாவம் அந்தம்மா.. நீ சொந்த தங்கச்சியா?"

"எங்கம்மாவும் பகவதி அக்கா அம்மாவும் சொந்த அக்கா தங்கச்சிங்க."

"நீ துக்கம் கேக்கப் போறியாக்கும்."

"இல்ல... எங்கக்காவுக்கு துணையா இருக்கப் போறேன்."

"கணக்கு வழக்குல உதவியா இருப்பியாக்கும்."

"இல்ல.. அக்கா சமைக்கக் கூடாதுல்ல... நான் சமைச்சுப் போடலாம்னு போறேன்."

பின்னால் நின்று கொண்டிருந்தவனுக்கு அந்தப் பேச்சு கேட்கவில்லை. அவர்கள் சளைக்காமல் பேசிக் கொண்டிருப்பது கேட்டது.

அவன் பஸ்ஸின் மறுமுனைக்கு போய் உட்கார்ந்து கொண்டான். அங்கிருந்தபடியே சொர்ணலட்சுமியை வெறுப்புடன் பார்த்தான்.

டிரைவருக்கும் கண்டக்டருக்கும் பிடித்த பெண்ணை அவனுக்கு ஏனோ பிடிக்காமல் போயிற்று. உலகம் விசித்திரமானது. நமக்குப் பிடித்தது மற்றவருக்கும் பிடித்தால் நமக்குப் பிடிக்காமல் போய் விடுகிறது.

ஒரு உச்சிக்கு மலை ஏறி இறங்க, மழை மேகம் சில்லென்று பஸ்ஸுக்குள் புகுந்தது.

"யப்பா... குளிருது..." சொர்ணலட்சுமி தலைப்பை உதறி தோள் பட்டையைப் போர்த்திக் கொண்டாள்.

"கெட்டுது போ... ஒரு மேகம் வந்து எல்லாத்தையும் கெடுத்துருச்சு..." டிரைவர் வேகமாய் அலுத்துக் கொண்டான்.

"என்ன ஆச்சு?" சொர்ணலட்சுமி மிகக் கவலையோடு அவர்களிடம் கேட்டாள்.

"மேகம் இருட்டிட்டு வந்து பாதைய மறைச்சிடுச்சு. அதைச் சொல்றோம்."

"நான் எஸ்டேட் போறதும் கஷ்டமாயிடுமா?" சொர்ணலட்சுமி கவலைப்பட்டாள்.

அவர்கள் பதில் சொல்லவில்லை. ஆனால் மழை இருட்டிக் கொண்டு வந்தது. வேகமாய் பெய்ய ஆரம்பித்தது. அவ்வளவு கனமான மழையை அதற்கு முன் சொர்ணலட்சுமி பார்த்ததேயில்லை.

**க**திரேசன் நிதானமாய் மலைப்பாதையில் வண்டி ஓட்டிக் கொண்டிருந்தான். இது நிற்கிற மழையாய்த் தெரியவில்லை. இருட்டத் துவங்கினால் இந்தப் பாதையும் தெரியாது போய் விடும். பின்னால் பஸ் சத்தம் கேட்டது. ஒதுங்கிக் கொண்டான். பஸ் அவனைக் கடந்து போயிற்று. சற்று தூரம் போய் நின்றது.

"ஓடிப் போய் அந்தக் காருல ஏறிக்க..." அந்த டிரைவர் சொர்ணலட்சுமியிடம் சொன்னான்.

"அது நாச்சியப்பன் செட்டியாரோட காரு."

"அவரு காருல நான் எப்படி ஏர்றது..."

"எஸ்டேட் போவேணாமா. போய் ஏறிக்க."

"நான் நடந்து போயிடுவேன்."

"நடந்தா... இந்த மழையிலயா... காணாத போயிடுவ... போய் ஏறு."

சொர்ணலட்சுமி எழுந்தாள். தயங்கினாள். பின்பக்கம் போய் கண்ணாடி வழியாக அந்தக் காரைப் பார்த்தாள்.

காரில் உள்ள கதிரேசனுக்கு ஏன் பஸ் வழி மறித்து நிற்கிறது என்று தெரியவில்லை.

சொர்ணலட்சுமி இறங்கி ஓடிப் போய் அந்தக் காரின் முன்பக்கக் கதவைத் திறந்து உள்ளே உட்கார்ந்து கொண்டாள்.

கதிரேசன் திகைத்தான்.

"யார்?" என்றான்.

"**டி**ரைவர் அண்ணா அந்தக் குட்டி மழையில நனையிறத நீ பார்க்காத போயிட்டியே... தங்கத்துல அடிச்ச சிலை மாதிரி கண்ணு கொள்ளலை போ."

பஸ் நகர்ந்தது. தூங்கிக் கொண்டிருந்த ஆள் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான்.

உலகத்தில் ஆண்களுக்கு எளிதான விஷயம் பெண்ணைப் பரிகசித்தல். கடினமான விஷயம் பெண்ணை மதித்தல். மதிக்கவும் செய்யாது, பரிகசிக்கவும் செய்யாது ஒரு கூட்டம் ஆண் வர்க்கத்தில் உண்டு. கதிரேசன் அந்தக் கூட்டத்தில் ஒருவன்.

(தொடரும்)

குமுறல்

# அரசு செய்யும் பகற்கொள்ளை!

●● எங்கள் ஊரில் தினமும் இரவிலும் பகலிலும் பவர்கட்! இரவு எட்டு மணிக்குப் போனால் நள்ளிரவு ஒரு மணிக்கும் இரண்டு மணிக்கும் திரும்பி வருகிறது! மாணவர்கள் படிப்பு தடைபடுகிறது. இந்த அறிவிக்கப்படாத பவர்கட்டுக்கு என்ன காரணம்? யார் பொறுப்பு?

அரக்கோணம்,
எல். கோபாலகிருஷ்ணன்

●● டி.கே. பட்டம்மாள் பாடிய, 'எப்படிப் பாடினாரோ' பாடலை ஒலிபரப்புமாறு கோவை வானொலிக்கு ரிப்ளை கார்டு அனுப்பினேன். பதில் வந்தது. ஆனால் அதில் குறிப்பிட்ட தேதி, நேரத்தில் பாடல் ஒலிபரப்பாகவில்லை. வேண்டுகோளை மறுபடி எழுதினேன். மறுமுறையும் பதில் வந்ததே தவிர, பாடல் குறித்த சமயத்தில் ஒலிபரப்பாகவில்லை! ஏன் இப்படி? ஒலிபரப்புத் துறை தனியார் வசம் இருந்தால் இப்படி நடக்குமா?

கோவை,
கே. மாரியப்பன்

●● ஆரம்ப நாட்களில் சென்னை தொலைக்காட்சி, வாரம் ஒரு முறை நாற்பது நிமிஷங்களுக்கு கர்நாடக இசையை ஒளிபரப்பியது. பின்னர் அது முப்பது நிமிஷங்களாகக் குறைந்தது. தற்போது கழுதை தேய்ந்து கட்டெறும்பு கதையாக, கர்நாடக இசைக் கச்சேரிகளைச் சுத்தமாக நீக்கி விட்டது. சில சமயம் இரண்டாவது அலைவரிசையில் ஒளிபரப்புகிறார்கள். அதுவும் பகல் 12லிருந்து 2 மணிக்குள் என்பதால் கேட்க முடிவதில்லை. மேற்கத்திய இசையின் பாதிப்பால் நமது பாரம்பரியக் கலைகளை இப்படி 'தூர்தர்ஷன்' குழி தோண்டிப் புதைத்தால் மற்றவர்களிடம் என்ன எதிர்பார்க்க முடியும்? கச்சேரிகளை "விஷுவல்"களுடன் எவ்வளவோ சுவாரஸ்யமாக அனைவரும் காண ஒளிபரப்ப முடியும். அதன் மூலம் கர்நாடக இசையில் புதிய ஆர்வத்தை மக்களிடம் உருவாக்க டீவியால் நிச்சயம் முடியும். நிலைய நிர்வாகிகள் சிந்திப்பார்களா?

சென்னை - 91,
டி.என். பாலகிருஷ்ணன்

●● மத்திய அரசு, சேமிப்புப் பத்திரம் NSC VIII — வாங்கினால் ஆறு வருடங்களில் இரட்டிப்புத் தொகை தருவதாகக் கூறியது. ஆனால் ஆறு வருடம் சென்று கேட்டபோது குறைவாகத்தான் கொடுத்தார்கள். விசாரித்தால் இடையில் அரசு ஒரு சதவீதம் வட்டி குறைத்து விட்டதாகச் சொன்னார்கள். அரசாங்கம் முதலில் ஒப்புக்கொண்ட வட்டி விகிதத்தைத் தருவதுதான் நியாயம். அரசே இப்படி மக்களை ஏமாற்றினால் பிறகு யாரிடம்தான் முறையிடுவது? தனி மனிதனுக்குக் கணிசமான இழப்பு; அரசுக்கோ .கோடி கோடியாக லாபம்!

திருபுவனம், ஆ. காந்திமதி

●● நூலகரான இல்லை நாயகத்துக்குப் பிறகு எந்த நூலகரும் பொது நூலக இயக்குனராக நியமிக்கப்படவேயில்லை. இல்லைநாயகத்தின் நேர்மை அனைவரும் அறிந்தது. அவருக்குப் பின் இயக்குனர் பதவிக்கு நூலகக் கல்வி பெற்ற யாரும் நியமிக்கப்படாதது ஏன்? தேவையான கல்வித் தகுதியும் அனுபவமும் எந்த நூலகருக்கும் இல்லையா? நூலகக் கல்வி இல்லாத கல்வி இலாகா இயக்குனர்களே பொது நூலக இயக்குனராக நியமிக்கப்படுவதால் அவர்களுக்கு நூலக இயக்கத்தில் ஆர்வம் இல்லை. பதவிக்கு வந்தவுடன் 'எங்கே பணம் கிடைக்கும்?' என்றே பார்க்கிறார்கள். அதனால் பொது நூலகங்களில் ஏற்பட்டு வரும் நவீன மாற்றங்கள் தமிழ்நாட்டில் நுழையவேயில்லை.

மதுரை, மாரியப்பன்

# பணம் பண்ணலாம் வாங்க!

**வி. கோபாலன்**

## "ப்ளூ சிப்!"

ஷேர் மார்க்கெட் பற்றிப் பேசறவங்க அடிக்கடி blue chip, bullish, market capitalisation — போன்ற ஆங்கில வார்த்தைகளை உதிர்ப்பாங்க.

- Blue chip company — முதல் தர நிறுவனம் (லாபம் நிச்சயம்)
- Bearish — ஷேர் விலைகள் மந்தமாக உள்ளன.
- Bullish — மார்க்கெட் சுறுசுறுப்பாக - ஏறுமுகமாக இருக்கிறது.

என்று கலப அகராதி தரலாம்.

Market Capitalisation என்பதைக் கொஞ்சம் விளக்கமாச் சொல்லணும்.

ஒரு நிறுவனத்தோட மூலதனத்தை capital என்று சொல்வார்கள். பங்கு மார்க்கெட்டுக்கு வரும் நிறுவனம் சிறப்பாகச் செயல்பட்டு லாபம் அடைந்து, நல்ல டிவிடன்டும் தர ஆரம்பிக்கும் போது அதனுடைய பங்குகளின் மதிப்பும் உயர்கிறது என்பது நமக்குத் தெரியும். ஒரு நிறுவன ஷேரின் மதிப்பு உயரும் போது அந்த நிறுவனத்தின் பங்கு மூலதனமும் மதிப்பில் உயர்ந்ததாகக் கொள்ளப்படுகிறது.

உதாரணமாக ஒரு கம்பெனியின் பங்கு மூலதனம் 200 கோடி ரூபாய் என்று வைத்துக் கொள்வோம். அந்த கம்பெனியின் ஷேர்கள் மார்க்கெட்டில் 25 மடங்கு விலை ஏறியுள்ளன என்றும் வைத்துக் கொள்வோம். பங்கு மூலதனமும் அதே மாதிரி இருபத்தைந்து மடங்கு பெருகி 5000 கோடி ரூபாயாக உயர்வதாகக் கொள்கிறார்கள். அந்த நிறுவனத்தின் மார்க்கெட் காபிடலைஸேஷன் 5000 கோடி ரூபாய் என்று சொல்கிறார்கள். உண்மையில் இந்தத் தொகை முழுக்க அந்தக் கம்பெனிக்குப் போய்ச் சேருவதில்லை. இருந்தாலும் மதிப்பீடு அளவில் தொகை இருக்கும்!




இதெல்லாம் பற்றி அதிகம் கவலைப்படாமலே பணம் பண்ணியிருக்கிறார் சிகாமணியின் நண்பர் ஒருவர். இவர் மாதச் சம்பளத்துக்கு (ரூ. 1500) கார்டிரைவராக வேலை பார்க்கிறார். தாம் வேலை செய்யும் ஷேர் புரோக்கர் நிறுவனம் மூலமாகவே கொஞ்சம் கொஞ்சமாக நல்ல ஷேர்களை வாங்கி, சரியான நேரத்தில் விற்று, அடைந்த லாபத்தில் ஒரு யமஹா வாங்கி விட்டார். இப்போது அவர் டிரைவர் வேலைக்கு வந்து போவது அந்த புத்தம்புது யமஹாவில்தான்.

அப்படியென்ன நிறுவனத்தின் ஷேர்களை வாங்கினார் என்று உடனே கேட்கத் தோன்றுகிறதல்லவா? அதை இப்போது சொன்னால் பழங்கதையாக இருக்கும். எனவே இப்போது வாங்கக் கூடிய சில ஷேர்களைச் சிபாரிசு செய்கிறேன்.

மார்ச் 1995 முடிவுற்ற நிதியாண்டின் இறுதியில் பல நிறுவனங்களின் லாபமும் டர்னோவரும் அதிகமாகியுள்ளது. சில ப்ளூசிப் நிறுவனங்கள் அறிவித்துள்ள டிவிடன்ட் கணக்கைப் பாருங்கள்.

ஐ. டி. சி. – ஐம்பது சதம். (நிகர லாபம் 25 சதவிகிதம் உயர்ந்துள்ளது). ஐ. டி. சி சமீபத்தில் 1:1 என்ற விகிதத்தில் பங்குதாரர்களுக்கு போனஸ் ஷேர் கொடுத்திருப்பதால் டிவிடன்ட் நூறு சதவிகிதம் என்று கணக்காகிறது! (போன ஆண்டு 85 சதவிகிதம் டிவிடன்ட் தந்தார்கள்.)

ரிலயன்ஸ் இன்டஸ்ட்ரீஸின் லாபம் ரூ 1100 கோடி. இந்தியாவிலேயே வேறு எந்த வர்த்தக நிறுவனமும் இவ்வளவு லாபம் காணவில்லை!

இவை தவிர லார்ஸன் அன்ட் டூப்ரோ, பான்ட்ஸ், ஹிந்துஸ்தான் லீவர், டிஸ்கோ (டாடா அயர்ன் அன்ட் ஸ்டீல் கார்ப்பரேஷன்) ஆகிய நிறுவனங்களும் சக்கைபோடு போட்டுள்ளன.



**பாதுகாப்பு**

''சற்றே குனிந்து வா, தலை இடித்துவிடும்''
காவலர் வழிநடத்தினர் கருணையோடு.
தூக்குமேடையை நோக்கிக் கைதி.

— குல்ஜு

'அப்படியிருந்தும் மார்க்கெட் 'டல்' அடிக்கிறதே. 'சென்செக்ஸ்' இறங்கி வருகிறதே!' என்று கேட்பீங்க. ஏற்கெனவே சொன்ன அரசியல் நிலைதான் அதுக்குக் காரணம். நிதி மசோதா சட்டமாகி, பட்ஜெட் தொடரும் முடிந்துவிட்ட நிலையில் மார்க்கெட் ஸ்திரமாகிடும்னு எதிர்பார்க்கலாம். எல் அண்ட் டி., ஐ. டி. சி. டிஸ்கோ, லீவர், பான்ட்ஸ் ஷேர்களை தைரியமாக வாங்கலாம்.

சிகாமணியுடைய சாரதி (அதாங்க டிரைவர்) நண்பரிடமிருந்து கத்துக்க வேண்டியது இன்னொண்ணும் இருக்கு: அதுதான் அவருடைய சளைக்காத சுறுசுறுப்பு. காலையில் ஆபீஸுக்கு ஓட்டிப் போவது. மாலையில் வீடு திரும்புவது என்பது தவிர வேறு பெரிய வேலைகள் அவருக்குக் கிடையாது. பார்த்தார் மனிதர். ஆபீஸ் அருகிலேயே ஒரு ஜூஸ் கடையில் வேலைக்குச் சேர்ந்துவிட்டார். முதலாளி ஆபீசில் வேலை செய்யும் நேரம், டிரைவர் ஜூஸ் கடையில் வேலை செய்கிறார். முதலாளி அனுமதியுடன்தான்! கணிசமான சம்பளமும் பெறுகிறார்.

பணம் பண்ண, இப்படியும் சில நூதனமான வழிகள் இருப்பதை நாம் அடிக்கடி நினைத்துக் கொள்வது நல்லது!

(பணம் பெருகும்)

## தலை போகிற வேலை! — சரியான ஜோடிகள்

# கணக்கு நேராச்சு!

இமைக்கும் நேரத்தில் கூட அது நிகழ்ந்துவிடலாம். ஒரு மனிதனை இனம் கண்டு கொள்ளும் சம்பவம்! இவன் "இவ்வளவுதான்" என்ற தீர்மானத்திற்கு வரும் தருணம். அதில் உச்சாணிக் கொம்பில் இருப்பவன் உருண்டு கீழே யும் விழலாம்! அடிமட்டத்தில் இருப்பவன் ஒரே மூச்சில் ஆகாயத்தையும் தொடலாம்.

கடைசியில் கணேசனின் விஷயத்தில் 'அது' நடந்தே விட்டது. நிமிஷ நேரத்தில் எனக்குள் இருந்த அவனுடைய பிம்பம் சிதிலமாகிச் சிதறிப் போனது. நம்ப முடியாமல் மனது, கால் உதைக்கும் குழந்தையாய்த் தவித்தது.

"ஏழாந்தேதியே திருப்பிக் குடுத்துட்டேனே! மறந்துட்டியா?"

சவுக்கடி வாங்கியதைப் போல என் உடம்பு விதிர்த்தது. அந்த வார்த்தை, புதிதாய் ஒரு கணேசனை எனக்கு அறிமுகப்படுத்தியது.

"கணேசா..." தயக்கமான என் குரல் நகர இருந்த அவனை நிறுத்தியது.

"நிஜமாத்தான் சொல்றியா கணேசா?"

கணேசன் திருதிருவென்று விழித்தான். வார்த்தை வராமல் என்னை மேலும் கீழும் அளவெடுத்தான்.

"இதிலென்ன விளையாட்டு மாணிக்கம்? நான் உன்கிட்டே இன்னிக்கு நேத்தா வாங்கறேன்...? சம்பளத் தேதியானா வட்டிப் பணமா உனக்கு நிறைய வருமானம் வருது. எங்கியாவது கணக்கு விட்டிருப்பே..."

அந்தக் கணத்தில் கணேசனைப் பொறுத்தவரை விசாலமாய் இருந்த என் மனக விரல்பட்ட மலராய்ச் சூம்பிப் போனது. என்னை "ஈட்டிக்காரன்" என்பதாக எடுத்தெறிந்து பேசிவிட்ட கணேசனின் 'ஏழைத்திமிர்' எனக்குள் ஒரு பூகம்பத்தை மையம் கொள்ளச் செய்தது.

எதுவும் பேசாமல் இடத்தைக் காலி செய்தேன். கணேசன் நெடுநேரம் அங்கேயே நின்று கொண்டிருப்பது, என் ஸீட்டில் இருந்து பார்க்கும்போது நிழலாகத் தெரிந்தது.

என் புறக்கணிப்பு அவனைப் புண்படுத்தி இருக்கக் கூடும்! இருக்கட்டுமே! வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டதாகப் புளுகத் தெரிந்தவனுக்கு இந்தப் புண்ணெல்லாம் அப்படி ஒன்றும் புரையோடி விடாது! மண்ணைப் போல உதறிவிடுவான்! பாவி, கைநீட்டி வாங்கிவிட்டு எத்தனை ஜாலக்காகக் கழன்று கொள்கிறான்!

எனக்கு வேலையில் கவனம் செல்லவில்லை! ஜாப்பை நிறுத்திவிட்டு, பிசிரைத் துடைக்கும்படி ஹெல்ப்பரிடம் சொல்லிவிட்டு, பாத்ரூம் பக்கம் நழுவினேன்.

கணேசனின் வொர்க்கிங் டேபிளைக் கடக்கும்போது ஓரக் கண்ணால் பார்த்தேன். கையில் ஏந்திய ஃபைலோடும் வைஸில் பொருத்திய ஜாப்போடும் எங்கோ வானத்தை மேய்ந்து கொண்டிருந்தான் கணேசன்! கிட்டத்தட்ட அவனும் என்னைப் போலவே கலங்கிய சேறாகிவிட்ட மனசோடு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான் என்பது புரிந்தது.

பணம் போயிற்றே என்ற பரிதவிப்பில் நியாயமிருக்கிறது எனக்கு! அவனுக்கு என்ன கேடு! வாங்கி விழுங்கி ஏப்பம் விட்டுவிட்டு, கொடுத்துவிட்டதாகச் சத்தியம் செய்பவனுக்கு சங்கடப்பட என்ன இருக்கிறது!

ஒருவேளை பொய் சொன்னது மனசில் ஊசி குத்துகிறதோ என்னவோ! கணேசா, இந்த இருநூறு ரூபாய்க்காக

ஏன் இப்படி உன் இமேஜைத் தொலைத்தாய்? ஏன் இப்படி உயரத்திலிருந்து உருண்டு விழுந்து உருப்படி இல்லாமல் போனாய்? அடுத்த மாதம், இல்லை... ஆறு மாதம் கழித்துத்தான் திருப்பிக் கொடேன்! நான் என்ன உன் கழுத்துக்குத் துண்டு போடப் போகிறேனா? இல்லை... வட்டிக்கு மேல் வட்டி போட்டு உன் வயிற்றில் அடிக்கப் போகிறேனா?

உன்னை என்ன வாடிக்கைக்காரனாகவா நினைத்திருந்தேன்? அந்த வரம்பைத் தாண்டி, என் குடும்ப வட்டத்துக்குள் ஒருவனாகத்தானே உன்னை வைத்திருந்தேன்! எல்லாவற்றையும் உதறி எறிந்துவிட்டு ஓடிவிட்டாயே!

கணேசனிடம் அசாத்தியமான பணிவு இருந்தது. அடுத்தவர் கஷ்டத்தைச் சுமக்கும் எல்லை வரை தயங்காமல் தோள் கொடுக்கும் துணிச்சல் இருந்தது. தன் துயரங்களை இருட்டடிப்புச் செய்து முடிந்தவரை யாருக்கும் இடைஞ்சல் தராமல் தாங்கி நிற்கும் தன்மானம் இருந்தது.

வரிசையாக தங்கைகளைக் கட்டிக் கொடுத்து, வாலிபம் விடைபெறும் சமயத்தில் விவாகம் புரிந்து கொண்டு, வட்டிக்கும் வறுமைக்கும் நடுவில் வாட்போர் புரிந்து கொண்டிருக்கும் நிலையிலும் கூட, சொன்ன வார்த்தை தவறாத நாணயம் இருந்தது.

இதற்காகவே நான் கணேசனை நிஜமாக நேசித்தேன். நண்பனாக தக்க வைத்துக் கொள்வதில் யதார்த்தத்தை மீறிய ஓர் ஆத்ம திருப்தியைச் சுவைத்தேன்.

நான் வட்டிக்குப் பணம் கொடுப்பவன்தான். கறாராகப் பேசிப் பைசா விடாமல் கறந்து கொள்பவன்தான்! என்றாலும் எனக்குள் வெற்றிலை நரம்பாய், ஊசி முனைக் கோடாய், மிகவும் மெல்லியதாக ஒரு மனித நேயத்துக்கான தாகம் அவ்வப்போது தலைநீட்டி எட்டிப் பார்ப்பதுண்டு! நிமிஷ நேரமே நீடிக்கும் அதன் வாழ்வின் பயனை என் வாடிக்கையாளர் எல்லோருக்கும் வழங்கி வரும் வள்ளல் தன்மைக்கு வக்ரம் நிறைந்த என் வியாபாரப் புத்தி வழிமறிக்க, கணேசன் ஒருவனுக்கு மட்டுமே ஏனோ நான் வாசல்

# ஜெரா

திறந்தேன்!

ஆரம்பத்தில் நானே வலியப் போய், அவன் முக வாட்டத்தைப் பார்த்து உதவி செய்தேன்... பிறகு அவனாகவே கேட்க ஆரம்பித்தான். சொன்ன தேதிக்கு அவனாகவே கொண்டு வந்து திரும்பக் கொடுப்பான். மாதக் கணக்காகும் என்றால் ஒரு குறைந்த வட்டியைக் கணக்குப் போட்டுக் கூடச் சேர்த்துக் கொடுப்பான்! ஆனால் நான் அவனிடம் வட்டியாக ஒரு பைசா கூட வாங்கிக் கொண்டதில்லை.

"எப்போது திருப்பித் தருவாய்?" என்று மறந்தும் கேட்டதில்லை! அவன் கொடுக்கும்



# கலக்கப் போகும் குமரிப் பக்கங்கள்!

கன்னியாகுமரி வாசகர்களின் முறை வந்துவிட்டது! அடுத்ததாக இம்மாவட்ட படைப்பாளிகளின் போஸ்ட் கார்ட் 'கிரியேஷன்கள்' கல்கியின் குமரிப் பக்கங்களில் இடம் பெறும்.

● இப்போதைய குமரி மாவட்ட வாசகர்கள் எழுதலாம்.

● ஜோக், கதை, துணுக்கு, சம்பவம், மாணவர் செய்தி - எதுவாயினும் போஸ்ட் கார்டுக்குள் அடக்கிவிடுங்கள்.

● தேர்ந்தெடுக்கப்படும் ஐட்டங்கள் பிரத்தியேகப் பக்கங்களில் இடம்பெற்றுச் சன்மானம் பெறும்.

● அதிகபட்சமாக நான்கு வாரங்கள் வெளியாகும் குமரி மாவட்டப் பக்கங்களில் இடம்பிடிக்கும் மிகச் சிறந்த துணுக்குக்கு ஒரு சிறப்புப் பரிசும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

● முகவரிப் பகுதியில் 'கலக்கலான குமரி' என்று குறிப்பிட்டு போஸ்டு கார்டுகளை அனுப்புங்கள்.

— ஆசிரியர்

போது வாங்கிக் கொண்டதுண்டு!

சென்ற மாதம் அவன் மனைவியை ஊருக்கு அனுப்ப வேண்டும் என்று பணம் கேட்டான். அவனுக்கு இது தலைப்பிரசவம். என் மனைவியை விட்டு பலகாரங்கள் செய்து, எளிமையாய் வளைகாப்பு நடத்தி, நிறைவாக அவளையும் அவனையும் பஸ் ஏற்றிவிட்டேன். அப்போது அவனிடம் கொடுத்ததுதான் இந்த இருநூறு ரூபாய்!

அவனை உரசிக் கொண்டு நின்று, உள்ளங்கையைப் பிரித்து, பணத்தை வைத்து அழுத்தியபோது எத்தனை பரவசத்தோடு என்னைப் பார்த்தான்! விளக்குப் போட்டாற்போல் விழிகள் பிரகாசிக்க, "மாணிக்கம்" என்று தழுதழுத்தான். எப்படி.... எப்படி மறந்து போனாய் கணேசா?

பொதுவாகவே இந்த கொடுக்கல், வாங்கல் விட்டுப் பெண்கள்வரை எட்டுவதை கணேசன் என்றைக்குமே விரும்பியதில்லை! மற்றவர்கள் விஷயத்தில், பாதுகாப்பு கருதி பெண்கள் காதுவரை வட்டி விகிதம், வாங்கிய தொகை எல்லாவற்றையும் வலியப் போய் விவரித்துவிடும் எனக்கு கணேசன் மட்டுமே விதிவிலக்காய் இருந்தான்!

அதனால்தானோ என்னவோ அவன் மனைவியும், என் மனைவியும் கூட ஒருவருக்கொருவர் அனுசரித்துக் கொண்டு, தோழமையோடு நெருங்கிப் பழக முடிந்தது. பொருளாதார ஏற்றத்தாழ்வு எந்த சந்திலும் புகமுடியாதபடி நெருக்கமாய் ஓர் உறவு நீண்ட காலமாய்த் தொடர முடிந்தது... இனி மேல்...?

மதிய இடைவேளையில் நான் வேண்டுமென்றே கணேசனைத் தவிர்த்தேன். கேரியரை எடுத்துக் கொண்டு நகர்ந்தேன். நாங்கள் வழக்கமாகச் சாப்பிடும் ஆலமர நிழலில் கணேசன் மட்டும் தனியனாய், பிரிக்கப்படாத கேரியரோடு உட்கார்ந்திருந்தான்! நான் கண்டுகொள்ளவே இல்லை! தவிக்கட்டும் ராஸ்கல்! ஏழாந்தேதியே கொடுத்துவிட்டதாக எப்படிப் புளுகுகிறான்?

ஏழாந்தேதி சம்பளம் வாங்கிய கையோடு அரைநாள் லீவு போட்டுவிட்டு மனைவியைப் பார்க்க ஊருக்கு ஓடினானே! அதை அவன் மறந்திருந்தாலும் நான் மறக்கவில்லை!

மாலையில் வீடு திரும்பும்போது பெரும்பாலும் என் 'மொபட்டின்' பின்னால்தான் கணேசன் தொற்றிக் கொள்வான்! இன்று அவன் வரவில்லை. நானும் அழைக்கவில்லை.

மெயின் கேட்டுக்குச் சற்றுத் தள்ளி வட்டி கொடுக்காத ஒரு நபரை நான் வறுத்தெடுத்துக் கொண்டிருக்கும்போது கணேசன் தயங்கித் தயங்கி நின்றான்! இதுதான் சாக்கென்று, அவனுக்கு உரைக்க வேண்டுமென்பதற்காகவே நான் அந்த நபரைப் பார்த்து உரக்கக் கத்தினேன்!

"வாங்கினதைக் கொடுக்கணும்ங்கிற வைராக்கியம் வேணும்யா. வயத்துக்கு உப்பு போட்டுத்தானே சாப்பிடறே?"

நான் ஜாடையாக கணேசனைப் பார்க்கும்போது, அவன் தலைகவிழ்ந்திருந்தான்! திட்டு வாங்கிக் கொண்டிருந்தவன் கணேசனைப் பார்த்ததும் விட்டதே போதும் என்று ஓடிப் போனான்!

கணேசன் மென்று விழுங்கியபடி, "மாணிக்கம்... அந்த இருநூறு ரூபாயை நான் சத்தியமா..." என்று இழுக்கவும்... அவன் முடிக்கும்வரை எனக்கு கேட்டுக் கொண்டிருக்கப் பொறுமை இல்லை. ஏமாற்றம் ஏறி



# அம்மாவுக்குத் தெரியும் ஸ்ரீபெட்தான் தரமானதென்று...

அதனால்தான் பள்ளிக்குச்
செல்லும் தன்
குழந்தைகளுக்கு குடிநீரைச்
சுத்தமாகவும்
சுகாதாரமாகவும்
எடுத்துச்செல்ல ஸ்ரீ பெட்
வாட்டர் பாட்டில்களையே
எப்போதும்
தேர்ந்தெடுக்கிறாள்.

உங்களுக்காக முதன்
முறையாக ஜப்பானியத்
தொழில்நுட்பத்துடன்
கம்ப்யூட்டர்
துணை கொண்டு
வடிவமைக்கப்பட்டது.



**புதுப்புது
வடிவங்கள்...
கண்கவர்
வண்ணங்கள்.**

AKSHAR




ஸ்ரீராம் நிறுவனத்தின்
தரமான தயாரிப்பு.
தயாரிப்பாளர்கள் :
ஸ்ரீபெட் இன்டஸ்ட்ரீஸ்
(பி) லிமிடட்.

## ஸ்ரீபெட்

**ஜார்கள் ◆ பாட்டில்கள்**

உடையாதவை ◆ உணவுத்தரம் காப்பவை

சுகாதாரமானவை



''என்னங்க, பக்கத்து வீட்டுக்காரருக்கு மண்வெட்டி இரவல் வேணுமாம். தரட்டுமா?''

''தாராளமாகக் கொடு! ஆனா, அது அவனுடையதுதான்னு கண்டுபிடிக்கிறதுக்கு முன்னாடி திருப்பி வாங்கிடு!''

- எம். அசோக்ராஜா

---

மிதிக்க, உடம்பில் அனல் வீசியது.

''வுடு கணேசா! வீணாப் பேச்சு எதுக்கு? நரி தின்னக் கோழி கூவவா போவுது? ஏதோ பிச்சைக்காரனுக்குப் போட்டதா நினைச்சுக்கறேன்!''

கொடுமையான வார்த்தைப் பிரயோகங்கள் எனக்கொன்றும் புதியதல்ல! ஆனால் கணேசனின் மீது பிரயோகிப்பது மட்டுமே முற்றிலும் புதியது! மெல்லிய நடுக்கம் கூட என் தேகத்தில் ஓடியது. கணேசன் பிடித்து வைத்த களிமண் பொம்மை போல விசுக்கென்று நின்றுவிட, நான் வேகமாக மொபட்டை இயக்கினேன்.

**மா**லை சுமார் ஆறரை மணி இருக்கும். வெளிச்சத்தை விழுங்கிவிட்டு இருட்டு மேல் எழுந்து நிற்கத் தொடங்கி இருந்தது. குளித்துவிட்டுத் தலைதுவட்டிக் கொண்டிருந்தவன், வாசலில் நிழலாடவே, ''யாரது?'' என்றேன்.

''நான்தான் மாணிக்கம்'' பலவீனமான பதில் குரல் எனக்கு கணேசனை அடையாளம் காட்ட, வெளியே வந்தேன்.

வாசலில் நின்றிருந்தான்! நான், உள்ளே வா என்று கூப்பிடவும் இல்லை. அவன் இயல்பாக உள்ளே வரவும் இல்லை.

என்னைப் பார்த்ததும் பாக்கெட்டில் கைவிட்டு எடுத்து நீட்டினான் - பணம்! நான்கு ஐம்பது ரூபாய்த் தாள்கள்!

கையில் பணத்தை வாங்கியதும், எனக்கு எல்லாமே மறந்து போனது. பழைய அன்னியோன்னியமும், அக்கறையும் பட்டென்று வந்து ஒட்டிக் கொள்ள, ''நம்ம கணேசன்'' என்ற நெருக்கம் மட்டுமே மனசை இறுக்கிப் பிடித்தது.

''பாத்தியா... நான்தான் சொன்னேனே! மறந்திருப்பேன்னு! சரிசரி... உள்ளே வா... காப்பி சாப்பிட்டுட்டுப் போவியாம்...'' என்றவன் உள்ளே பார்த்து, தோட்டத்திலிருந்த மனைவியைக் கூப்பிடக் குரல் கொடுத்தேன்.

''இல்லே... எனக்கு வேலை இருக்கு!'' என்று சுரத்தில்லாமல் சொல்லிவிட்டுத் திரும்பிய கணேசன், ஏதோ நினைத்துக் கொண்டவனாகச் சட்டென்று திரும்பி என்னைப் பார்த்தான்!

''இதோட கணக்கு நேராயிடுச்சு மாணிக்கம்.''

தழுதழுத்த குரலில், ஆனால் ஸ்பஷ்டமாகச் சொல்லிவிட்டு வேகமாக வாசலைக் கடந்து வெளியேறும் கணேசனைப் பார்க்கும்போது என் மனத்தின் மூலையில் ஓர் இனம் தெரியாத வலி இருந்தது.

நான்கு ஐம்பது ரூபாய்த் தாள்கள், கையில் அரை டன்னாய் கனக்க உள்ளே வந்தேன். மேஜை இழுப்பறையைத் திறந்து, கணக்குப் புத்தகத்தைப் புரட்டி, வரவு வைத்துக் கொள்ள... அட, இதென்ன! எனக்குத் தெரியாமல் இந்த நோட்டுக்குள் முனை மடங்காத புத்தம் புதிய இரண்டு நூறு ரூபாய்த் தாள்கள் எப்படி முளைத்தன?

அதற்குள், ''கூப்பிட்டீங்களா?'' என்றபடி உள்ளே வந்த என் மனைவி, இறுகிய என் முகத்தைப் பார்த்து மௌனமானாள்.

''இந்த நோட்டுக்குள்ளே இருநூறு ரூபா எப்படி வந்திச்சு?''

''காலையில நான்தான் வச்சேன்!''

''என்னடி சொல்றே?''

''அன்னிக்கு அவசரமா ஊருக்குப் போறதாச் சொல்லிட்டு, உங்க ஃப்ரண்ட் கணேசன்தான் இந்தப் பணத்தை என்கிட்டே கொடுத்துட்டுப் போனாரு! மறக்காம உங்ககிட்டே கொடுக்கச் சொன்னாரு! மளிகை சாமான் அலமாரியில வச்சவ மறந்தே போயிட்டேன்! காலையிலேதான் பார்த்து, உங்க கணக்குப் புஸ்தகத்துல எடுத்து வச்சேன்! ஆமா, இவருக்குக் கூடவா நீங்க வட்டிக்குப் பணம் தர்றீங்க?''

என் மனைவியின் கேள்விக்குப் பதில் சொல்ல இயலாமல், சக்தி எல்லாம் உறிஞ்சப்பட்டவனாய் தொப்பென்று நாற்காலியில் சரிந்தேன். கண்ணில் நீர் முட்டியது. கணேசனின் கடைசி வார்த்தைகள் என் காதில் ஒலித்தன!

''இதோட கணக்கு நேராயிடுச்சு மாணிக்கம்!''

# ப. சிதம்பரத்தின் புதிய பொறுப்பு பற்றி....?



• முள் கிரீடம்



• பெயர் வைக்கலாமா?

☐ ரூ. 25/- பரிசு பெறுபவர்: ஏ.எம். பழனிசாமி, 28, எஸ்.பி. ரோடு, கோவை - 18.

● ஆ. திருவாசகமணி, புஞ்சை புளியம்பட்டி.

*? 'நொண்டிக் குதிரை'யை வைத்துக் கொண்டு, இண்டி ரேசில் ஓடப் பார்க்கிறது காங்கிரஸ்' என அமைச்சர் செங்கோட்டையன் வர்ணித்துள்ளது பற்றி....?*

! 'நொண்டிக் குதிரை' ஜாக்பாட்டில் ஜெயித்திருக்கிறதே! பதிமூன்று மாநிலங்களில் 26 இடங்களுக்கு நடந்த இடைத் தேர்தலில் காங்கிரஸ் பத்து இடங்களை வென்றுவிட்டது.

● கோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

*? ராஜீவ் கொலை வழக்கு விசாரணையைத் துரிதப்படுத்தும் பொறுப்பை அமைச்சர் ப. சிதம்பரத்துக்குக் கொடுத்துள்ளாரே பிரதமர்?*

! வழக்கு இழுத்தடிப்பதால் ஏற்பட்டுள்ள சோனியா காந்தியின் அதிருப்தியைப் போக்கவே, ராஜீவுக்கு நெருக்கமான ப.சி.க்கு இந்த முள் கிரீடம். வழக்கில் முதல் குற்றம் சாட்டப்பட்டுள்ள பிரபாகரனைத் தருவிப்பது குறித்து அவர் என்ன செய்யப் போகிறார் என்பதுதான் அனைவர் மனத்திலும் இருக்கும் கேள்வி.

● மு. ரவிச்சந்திரன், சேலம் - 9.

*? வருமான வரி விலக்கு வரம்பை மேலும் உயர்த்த முடியாது என்கிறாரே மன்மோகன்சிங்?*

! ஏமாற்றாமல் வருமானவரி செலுத்துபவர்கள் மாதச் சம்பளக்காரர்கள்தான் என்னும்போது வரம்பை மேலும் உயர்த்தினால், அரசுக்கு கணிசமான வருமானம் குறைந்து போகும் என்று பயப்படுகிறார் போலும்! எப்படியோ, பெருந்தொகைகளை வரியாகச் செலுத்தாமல் இன்னமும் ஏமாற்றிக் கொண்டிருக்கும் பண முதலைகள் ஏராளம்!

● செவேகா, ஏத்தாப்பூர்.

*? விஜய்காந்தின் தொடர் தோல்விக்குக் காரணம் என்ன?*

! அவர் 'உதை'யை நம்புகிற அளவுக்குக் 'கதை'யை நம்பினால்தானே!

● எம். விஜயா, மின்னல்.

*? தேர்தல் முறை அல்லது ஜனநாயக முறை - இவற்றில் எதை மாற்றினால் நாடு கமாரான அரசியல்வாதிகளைப் பெற வாய்ப்பு ஏற்படும்?*

! முதலில் மாற்ற வேண்டியது கல்வி முறையைத்தான். அதைச் சீர்திருத்தினால் தேர்தல் முறையும் ஜனநாயக முறையும் பலம் பெற்றுச் சிறடையும். 'எங்கே அப்படி ஆகிவிடப் போகிறதோ, தங்களுக்கு வாய்ப்பு இல்லாமல் போய்விடப் போகிறதோ!' என்ற பயத்தில்தான் எந்தக் கட்சியும் ஆட்சியும் கல்விச் சீர்திருத்தத்துக்காக, வாழ்க்கைக் கல்விக்காகக் கொடி பிடிப்பதில்லை.

● ஏ.எம். பழனிசாமி, கோவை - 18. ☐

*? அரசு நிறுவனங்களுக்குத் தமது பெயர் வைக்கக் கூடாது என்று தமிழக முதல்வர் வேண்டுகோள் விடுத்தும் ஊட்டி ரோஜா பண்ணைக்கு ஜெ. பெயர் வைக்கப்பட்டுள்ளதே?*

! பின்னே, இப்போது இருக்கும் அரசியல் சூழ்நிலையில் ரோஜாவின் ராஜாவான நேருவின் பெயரையா வைக்க முடியும்! தமது பெயர் சூட்டப்பட்ட ரோஜா பண்ணையைத் தாமே திறந்து வைத்திருப்பதன் மூலம் தமது அறிக்கைகளின் மதிப்பு என்ன என்பதை நிரூபித்திருக்கிறார் ஜெ.

● பி. ராஜசேகரன், மதுரை - 16.

*? அடுத்த ஐந்தாண்டுகளில் அரிசி உற்பத்தி இருபது சதவிகிதம் அதிகரித்தால்தான், பெருகும் ஜனத்தொகையின் பசியாற்ற முடியும் என்று தமிழ்நாடு வேளாண் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் சங்கரன் கூறியிருக்கிறாரே?*

! உணவு தானியங்கள் உற்பத்தி பெருகினால் மட்டும் போதாது. அவற்றைப் பாதுகாத்து உபயோகிக்கும் வழிமுறைகள் உள்ள உணவுக் கிடங்குகள் நிரம்பி வழிகின்றன. தகுந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்காவிட்டால் தானியங்கள் வீணாகி ஆயிரம் கோடி ரூபாய் நஷ்டம் ஏற்படும் என்று இந்திய உணவுக் கார்ப்பரேஷனின் நியமன இயக்குநர் கனையலால் கித்வானி எச்சரித்திருக்கிறார்.

● த. சந்திரசேகரன், சென்னை - 13.

**? அடுத்தது சசி டீ.வி. தானே?**

! சரியாப் போச்சு! உலகம் வியக்கும் உடன் பிறவாச் சகோதரிகளை இப்படிப் பிரிக்கறீங்களே! ஜெ.ஜெ. இருக்க சசி டீ.வி. எதற்கு?

● பால. கிருஷ்ணமூர்த்தி, மருங்கூர்.

**? "சொப்பன வாழ்வில் மகிழ்ந்து சுப்ரமண்ய சுவாமி உனை மறந்தேனே...." பாடலைக் கேட்டதுண்டா?**

! ஆகா! விஜயநாகரியில ஆரம்பிச்சு ஜோன்புரி ராகத்துக்குப் போய் அருமையாய்ப்



• தொடர் தோல்வி ஏன்?

பாடியிருப்பார் தியாகராஜ பாகவதர். அது சரி, இப்போ எதுக்கு அந்தப் பாட்டை நினைவுபடுத்தறீங்க? அந்த ராகங்களுக்கே தடை விதிக்கப் போறாங்க!

● ஜெ. கண்ணன், சென்னை - 101.

**? பெங்களூர் மகாத்மா காந்தி ரோடை எல்லோருமே எம்.ஜி. ரோடு என்றுதான் குறிப்பிடுகிறார்கள். தலைவர்களை மக்கள் நினைவில் கொள்ள வேண்டும் என்று சாலைக்குப் பெயர் வைத்தால் இப்படிச் சுருக்குகிறார்களே, நியாயமா?**

! அண்ணா சாலை, பெரியார் சாலை, ராஜாஜி சாலை என்று சுருக்காமல்தான் சொல்கிறோம். அப்போது மட்டும் அவர்களைப் பின்பற்றியா வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

● வை. வெங்கடேசன், விழுப்புரம்.

**? அரசுடைமை வங்கிகளில் சேமிப்புக் கணக்குக்கான குறைந்தபட்சத் தொகை ரூ. 25 லிருந்து ரூ. 500 ஆக உயர்த்தப்பட்டுள்ளது; நடப்பு (current account) கணக்குக்கான குறைந்தபட்சத் தொகை ரூ. 5000 ஆக உயர்த்தப்பட்டுள்ளதே...?**

! இது சராசரி மக்களுக்கும் சிறு தொழில் செய்வோருக்கும் பலத்த அடி. அது மட்டுமல்ல, லாபகரமாக இருக்குமோ என்று ஆராய்ந்து பார்த்துத்தான் புதியவர்களைக் கணக்கு ஆரம்பிக்க அனுமதிப்போம் என்று தேசியமய வங்கிகள் முடிவெடுத்துள்ளன. இதே வங்கிகள் இலட்ச லட்சமாகக் கடன் கொடுத்து விட்டு உரிய காலத்தில் திரும்ப வாங்காமல் நஷ்டப்படுகிறார்கள். ஆனால் சிறுக சேமித்து முன்னேற நினைப்பவர்களுக்கு முட்டுக்கட்டை!



• பிடிக்காத போக்கு



• ஹீரோவா? வில்லனா?



• "நொண்டிக் குதிரை"

● எஸ். கண்ணன், மதுரை - 1.

**? போட்டி காங்கிரஸிலும் பிளவு ஏன்?**

! முதல் பிளவுக்குச் சொன்ன அதே காரணம் தான் இரண்டாவதுக்கும்: 'எதேச்சாதிகாரப் போக்கு' என்கிறார் கே.கே. திவாரி.

● மெய்யப்பா அருணாசலம், கோனாபட்டு.

**? சு. சுவாமி vs தமிழக முதல்வர் அறிக்கைகளை வைத்து ஒரு துப்பறியும் நாவல் எழுதும் போட்டி வைத்தால்....?**

! கதாநாயகன்/நாயகி அல்லது வில்லன்/வில்லி யார் என்பது எழுதுபவரைப் பொறுத்து மாறுபடும். அது சரி, அறிக்கைகளே நாவலை விட படு சுவாரஸ்யமாக இருக்கும்போது இப்படியொரு போட்டி எதற்கு?

# 45 — கே. பாலசந்தர்

**"A PERFECTIONIST IS A PERSON WHO TAKES INFINITE PAINS AND GIVES THEM TO OTHERS."**

எனது Sun T.V. தொடர் 'கையளவு மனசு' - முதல் பாகம் 18வது பகுதி (episode) முடியும் சமயம். இரண்டாம் பாகம் ஆரம்பிப்பதற்கு முன், 'சின்னத் திரை'யில் வரும் இரு தலையாட்டி பொம்மைகளும் (சார்லி - தாமு) முதல் பாகத்தில் தோன்றிய நடிக நடிகையர் அனைவரையும் ஒரு பேட்டி காண்பதாக ஒரு அத்தியாயம் அமைத்து விடலாம் என்று நினைத்தேன். அதற்கான படப்பிடிப்புகள் நடந்து முடிந்தன. நடிக நடிகையர் தங்களது பேட்டியில் குறிப்பிடும் சில காட்சிகளின் clipping களைப் போட்டு, இந்த அத்தியாயத்தை rough ஆகத் தொகுத்து வைத்திருந்தால் நான் வந்து பார்த்து விட்டு final instructions கொடுக்கிறேன் என்று எனது உதவியாளர் குகனிடம் சொல்லியிருந்தேன்.

"19வது அத்தியாயம் தயாராக இருக்கிறது; நீங்கள் வந்து பார்க்கலாம்" என்று குகன் போன் செய்தார்.

ஒரு சின்ன அதிர்ச்சி!

சில காட்சிகளில் நான் நடித்துக் காட்டிய விதத்தையும் அதை நடிகர்கள் அப்படியே நடிப்பதையும் ஒன்றாக இணைத்து பேட்டியில் clippingகளாகப் போடப்பட்டிருந்தது.

'எனக்குத் தெரியாமல் எப்பொழுது இவற்றை எடுத்தீர்கள்' என்று குகனிடம் கேட்டேன். படப்பிடிப்பின்போதே உங்களுக்குத் தெரியாமல் 'டேப்' செய்தோம் என்று சிரித்தபடி சொன்னார் குகன்.

"குறிப்புகளும் instructionகளும் கொடுக்கின்ற working shotகளைப் போடுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் நானே நடித்துக் காட்டுகின்ற அந்தப் பகுதிகளை நீக்கி விட்டு மீண்டுமொரு முறை தொகுத்து வை" என்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன்.

நான் வீட்டிற்குச் சென்றதும் எனது உதவியாளர்கள் (காமிரா மேன் உட்பட) அனைவரும் என்னிடம் ஒரு deputation வந்தார்கள். "இயற்கையாக அமைந்து விட்ட இந்த ஷாட்டுகள் அனைத்தும் கிடைப்பதற்கரியவை! அவற்றை நீக்கச் சொல்லாதீர்கள். Viewers interest நிறைய இருக்கிறது" என்று ஒட்டுமொத்தமாக என்னிடம் வாதாடினார்கள்.



• நாடக கால கே.பி.

சரியென்று நானும் சம்மதித்தேன்.

**For readers interest....**

நான் ஒரு நடிகனாக...

எனது நினைவுகள் பின்னோக்கிச் செல்கின்றன...

அண்ணாமலை பல்கலைக்கழக ஸ்தாபகர் நாள் விழா. நான் எழுதி இயக்கி நானும் ஒரு நடிகனாகப் பங்கேற்ற ஓரங்க நாடகம் 'ஹாஸ்டல் வாசம்' என்கிற தலைப்பில் சாஸ்திரி ஹால் மண்டபத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. அரங்கம் நிரம்பி வழிந்தது.

முதல் காட்சியில் பெரும் கைத்தட்டல்களையும் ஒருமித்த வரவேற்பையும் பெற்றேன். அடுத்த காட்சிக்காக வேறு உடைகள் அணிந்து மீண்டும் மேடையில் தோன்றியபோது மாணவப் பெருமக்களின் கூச்சலும் 'உய்' என்கிற விசில் சப்தங்களும் காதைப் பிளந்தன. ஏன் இப்படிக் கூச்சல் போடுகிறார்கள் என்று அந்த நேரத்தில் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. என்னுடன் பேசி நடிக்க வேண்டிய மாணவனும் ஒன்றும் புரியாமல் திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்தான். prompting செய்வதற்காக நின்று கொண்டிருந்த எனது நண்பன் sidingல் மறைந்து நின்று கொண்டு தலையில் அடித்துக் கொண்டான். தவறு என்னவென்பதைச் சைகையால் எனக்கு உணர்த்தினான். தவறை உணர்ந்து மின்சாரம் தாக்குண்டவனாக நான் மெல்ல siding நகர்ந்து சென்று தவறைத் திருத்திக் கொண்டேன்.

உடைகளை அவசர அவசரமாக இருட்டில் மாற்றிக் கொண்டு அடுத்த காட்சிக்கு மேடையில் தோன்றும்போது pant பட்டன்களை நான் சரியாகப் போட்டுக் கொள்ளவில்லை. இதுதான் மாணவர் பெருமக்களின் கூச்சலுக்குக் காரணம்.

ஒருவாறாக நடித்து முடித்தேன்!

நானே இயக்குபவனாகவும் இருப்பதால் நாடகம் நல்ல முறையில் நடந்து முடிய வேண்டும் என்கிற கவலையிலும் டென்ஷனிலும் மற்ற நடிகர்கள் தங்கள் தங்கள் வசனங்களைச் சரியாகச் சொல்கின்றார்களா என்கிற கவலையிலும் நான் ஏற்று நடிக்கும் பாகத்தை இப்படிக் கோட்டை விட்டு நின்றேன்.

அதனாலேயே நான் எழுதி இயக்குகின்ற நாடகங்களில் பெரிய வேடங்களாக ஏற்றுக் கொள்ளாமல் சின்னச் சின்ன வேடங்களாக மட்டுமே ஏற்றுக் கொள்வது என்கிற முடிவுக்கு வந்திருந்தேன்.

சென்னைக்கு வந்த பிறகு ஒரு சம்பவம். ஒரே ஒரு காட்சி! டாக்டர் வேடம்!

மேடையிலே படுத்திருக்கும் நோயாளியை நன்றாகப் பரிசோதனை செய்து பார்த்து விட்டு 'கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை' என்று சொல்லி விட்டுச் செல்ல வேண்டிய ஒரு சின்ன பாகம்.

நான் டாக்டராக மேடைக்குச் சென்றேன்; நோயாளியை ஸ்டெதஸ்கோப் வைத்துக் கொண்டு பரிசீலனை செய்தேன். சொல்ல வேண்டிய வசனத்தைச் சொல்வதற்கு விடா மல் அரங்கத்தில் ஒரே கூச்சலும் கும்மாளமும் சிரிப்பும் விசிலும்!

நான் விக்கித்துப் போனேன்.

ஏதோ சொல்லி சமாளித்து விட்டு siding வந்த என்னிடம், எனது நாடக நண்பன் கோவிந்தராஜன் "என்ன பாலு! நீயா இப்படி?" என்றான்.

"ஏன் கூச்சல் போட்டார்கள்?" என்று அவ னிடம் கேட்டேன்.

அவன் நிதானமாகச் சொன்னான்.

"ஸ்டெதஸ்கோப்பை காதில் செருகிக் கொள்ளாமலேயே நோயாளியைப் பரிசீலனை செய்யும் டாக்டரை இன்றுதான் நான் பார்த் தேன்."

So it was his turn that day.

அன்றைக்குத்தான் இந்த ஞானோதயம்! இனி நான் எழுதி இயக்குகின்ற நாடகங்களில் எக்காரணத்தைக் கொண்டும் சின்ன வேடங் கள் கூட நான் ஏற்றுக் கொள்ளப் போவ தில்லை!

இந்த சங்கல்பத்தையும் ஒருமுறை மீற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

நாடகம் 'சர்வர் சுந்தரம்'!

சர்வர் சுந்தரமாக நாகேஷ் மேடையில் முதல் காட்சியில் அறிமுகமாக வேண்டியதற்கு முன், டேபிள் துடைக்கும் பையன் வருவான்.

சர்வருக்காகக் காத்துக் காத்து டிபன் ஆர்டர் கொடுத்துவிட்டு அவன் வருகையை எதிர்பார்த்து நிற்கும் வாடிக்கையாளர்களும் பில்லுக்காகக் காத்திருப்பவர்களும் அந்தப் பையனிடம் கேள்விமேல் கேள்வி கேட்டுத் துளைப்பார்கள்.

எந்தக் கேள்விக்குமே பதில் சொல்லாமல் தன் கருமமே கண்ணாக டேபிள் மீதிருக்கும் எச்சில் தட்டுகளையும் டபரா செட்டுகளையும் வாளியில் தூக்கிப் போட்டுக் கொண்டு, துணியினால் டேபிள்களைத் துடைத்துக் கொண்டே இருக்கும் அந்த கிளீனர் பையன், போகிற போக்கிலே எல்லோருடைய கேள்வி களுக்கும் ஒரே பதிலாக "வருவார்! வருவார்" என்று சொல்லி விட்டுப் போக வேண்டும்.

அதன் பிறகு நாகேஷ் தனது இரு கைகளி லும் டிபன் தட்டுக்களுடன் வெகு லாகவமாக நுழைய... இதுதான் சர்வர் சுந்தரத்திற்கு அறிமுகக் காட்சி.

நாடக ஒத்திகைகள் ஆரம்பிப்பதற்கு முன் யார் யார் என்னென்ன கதா பாத்திரங்கள் என்று நான் அறிவிக்கும் போது இந்த டேபிள் கிளீ னர் பையன் வேடத்திற்கு ஒரு குறிப்பிட்ட நண்பன் பெயரைச் சொன்னேன். அவன் முகம் வெருவாகச் சுருங்கி விட்டது.

'டேபிள் கிளீனர் வேடம் தானா' என்று என்னிடம் அலுத்துக் கொண்டான். சரியென்று அவனை விட்டுவிட்டு ஒத்திகைகள் நடக்கின்ற நாட்களிலே - நாடக அரங்கேற்ற தினம் வரை - அந்த வேடத்திற்கு யார் என்று சொல்லாமலே நானே dupeஆக நடித்துக் கொண்டிருந்தேன்.

நாடக அரங்கேற்ற தினம்.

நாகேஷ் என்னிடம் கேட்டார்.

"அந்த டேபிள் கிளீன் செய்கின்ற பையன் நன் றாகச் செய்தால்தான் நாட கத்தின் ஆரம்பமே களை கட்டும்; அந்த வேடத்தை யாரைச் செய்யச் சொல் லப் போகிறாய் பாலு! It is a feeding character for my appearance in stage" என்று நாகேஷ் கவலைப் பட்டார்.

"நன்றாகச் செய்கின்ற ஒரு பையனைக் கொண்டு வந்து நிறுத்துகிறேன் பார்" என்று சொல்லிக் கொண்டு வந்த நான், நாடக அரங் கேற்றத்தன்று நானே காக்கி அரை நிஜாரைப் போட்டுக் கொண்டு கையில் ஒரு பிளாஸ்டிக் பக்கெட்டுடனும் டேபிள் துடைக்க ஒரு துணி யுடனும் வந்து நின்றேன். சக நடிகர்களுக் கெல்லாம் இது ஆச்சர்யமாக இருந்தது. அவர்கள் எதிர்பார்க்கவில்லை. ஆனால் நாகேஷ் மட்டும் சந்தோஷப்பட்டார்.

நாடகம் ஆரம்பமாயிற்று.

சர்வர் சுந்தரத்தை எதிர்பார்த்துக் காத்து நிற்கும் அத்தனை வாடிக்கையாளர்களின் கேள்விகளுக்கும் பதில் எதுவும் சொல்லாமல் அவர்களையெல்லாம் துச்சமாக ஒரு பார்வை பார்த்து விட்டு டேபிள்களை கிளீன் செய்து விட்டுப் போகிற போக்கில் "வருவார், வருவார்" என்று நான் சொல்லி மேடையை விட்டு வெளியேறியபோது அரங்கமே கைத் தட்டல்களில் அதிர்ந்தது.

நாகேஷின் entryக்கு வர வேண்டிய கைத் தட்டல்கள் கிளீனர் பையன் exitலேயே




# அடுத்த இதழில்....

# 'கமகம'வென்று மணக்கும் கவர்ஸ்டோரி!

('ஸ்டோரி' மட்டுமல்ல; கவரும் கூட 'கமகம'!)

கிடைத்து விட்டன. இதைச் சற்றும் எதிர்பார்க்காத நாகேஷ் இந்தச் சலசலப்பு அடங்கிய பிறகு தனது entryஐக் கொடுத்து தனக்கென்று கைத்தட்டல்களைத் தனியாகப் பெற்றுக் கொண்டார்.

இந்த நாடகம் நடக்கும் எல்லா நாட்களிலும் நானே இந்த வேடத்தை ஏற்று நடித்து வந்தேன். நானே தொடர்ந்து அதைச் செய்ய வேண்டுமென்று குழுவைச் சேர்ந்தவர்கள் sentimentalஆக விரும்பினார்கள். இந்த நாடகம் நாடக உலகில் பெரும் புயலைக் கிளப்பியது.

நாடக ஆசிரியர், இயக்குனரே இந்தச் சிறு வேடத்தில் அதிலும் கையில் பக்கெட்டுடன் கிளீனராக வந்து போவது எல்லோருக்கும் பெரிய ஆச்சர்யத்தைத் தந்தது.

நீங்கள் போய் இந்த வேடத்தை ஏன் செய்ய வேண்டுமென்று சிலர் என்னிடம் கேட்டார்கள்.

"இந்த வேடத்தை 'நீ செய்' என்று மற்ற சக நடிகர்களிடம் கேட்பதற்கு எனக்குச் சற்றுக் கூச்சமாக இருந்தது; அதனால் நானே அந்த வேடத்தை ஏற்றுச் செய்கிறேன்" என்று அவர்களுக்குப் பதில் சொன்னேன்.

நாடகம் திரைப்படம் ஆகும் போது :

இதே வேடத்தை நான்தான் செய்ய வேண்டுமென்று இயக்குனர் பஞ்சு (கிருஷ்ணன்) அவர்கள் எனக்கு ஒரு அன்புக் கட்டளையிட்டார்கள். முதன் முதலில் நான் திரையில் தலைகாட்டியது இந்தக் காட்சிதான்... ஆனால் rush போட்டுப் பார்த்ததோடு சரி!

துரதிர்ஷ்டவசமாகவோ, அதிர்ஷ்டவசமாகவோ படத்தின் நீளத்தைக் குறைக்க முற்பட்ட போது நான் தோன்றும் இந்தக் காட்சி வெட்டப்பட்டது.

"என்னைக் கட்டாயப்படுத்தி நடிக்க வைத்து விட்டு அதை வெட்டி விட்டீர்களே" என்று நான் பஞ்சு அவர்களிடம் உரிமையோடு சண்டை போட்டேன்.

பஞ்சு சொன்ன பதில் :

"ஒரு இயக்குனர் என்கிற முறையில் சென்டிமெண்டலாக நீங்கள் இதில் நடிக்க வேண்டுமென்று நினைத்தேன். ஒரு எடிட்டராக எடிட்டிங் மேஜை முன் அமரும் போது இந்தக் காட்சியை வெட்டி எறிய வேண்டிய கட்டாயம்; வெட்டிவிட்டேன். நீங்கள் ஒரு இயக்குனராக ஆன பிறகு இது உங்களுக்குப் புரியும்" என்றார்.

இயக்குனரான பின்பு எனக்குப் புரிந்தது. ஆம்! எடுப்பதும் பின்னால் நீளத்தைக் குறைக்க எண்ணி எடுத்த காட்சியை வெட்டுவதும் சினிமாவில் சர்வ சாதாரணம்.

எடிட்டிங் மேஜை முன்னால் அமரும் போது எத்தனை கஷ்டப்பட்டு இந்தக் காட்சியை எடுத்தோம் என்பதோ, அல்லது எவ்வளவு பணத்தைக் கொட்டி வாரி இறைத்து இந்தக் காட்சியைப் படம்பிடித்தோம் என்பதோ ஒரு இயக்குநரின் சிந்தனைக்கு வருவதேயில்லை; வருவதும் கூடாது.

**க**மலஹாசன் தான் இயக்கவிருக்கும் படத்தில் நான் ஒரு வேடம் ஏற்று நிச்சயம் நடிக்க வேண்டுமென்று என்னிடம் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறார்.

கமலுக்கு ஒரு வார்த்தை!

நீ இயக்குவதாலேயே நான் நடிக்க ஒப்புக் கொள்ளலாம். ஏனெனில் எனக்கு மற்ற டென்ஷன்கள் இல்லை. ஆனால் வந்து போகிற 'அப்பா' வேடங்களை ஏற்க நான் தயாரில்லை. உனக்கு சரிசமமாக அந்த வேடம் இருக்க வேண்டும். Am I asking for too much?

நல்ல நடிகர்களைப் படங்களிலே போட்டுக் கொள்வது மட்டும் ஒரு நல்ல இயக்குநருக்குப் பெருமை தராது; அவர்களை எப்படி உபயோகப்படுத்திக் கொள்கிறோம் என்பது தான் மிக மிக முக்கியமான விஷயம்.

Life consists not in holding
Good cards but in playing
Those cards well.

— JOSH BILLINGS.

## Tail Piece :

நான் நடிக்க வேண்டும் என்று கமல் சீரியஸாக நினைத்துக் கொண்டிருந்தால், நான் சொன்னதை வேடிக்கையாக எடுத்துக் கொள்ளட்டும். கமல் வேடிக்கையாக இதைச் சொல்லியிருந்தால் நான் சொன்னதை சீரியஸாக எடுத்துக் கொள்ளட்டும்!

(தொடரும்)

## வட்டமேஜை

### உயிர் வெல்லம்

◆ ரயில் விபத்தினைத் தடுக்க அருமையான ஆலோசனைகளைக் கூறியிருக்கிறீர்கள். ஆனால் ஆட்களைத் தேர்வு செய்யும் இடத்திலிருந்தே லஞ்சப்பேய் தலைவிரித்து ஆடும் பொழுது, மக்களின் உயிர்கள் இவர்களுக்கு வெல்லம் போல்தான். இதனை உணர்ந்து செயல்பட ஆரம்பித்தால் ரயில் விபத்து கணிசமாகக் குறையும் என்பதில் ஐயமில்லை. இல்லையெனில் தாங்கள் கூறும் யோசனைகள் செவிடன் காதில் ஊதிய சங்குபோலத்தான் ஆகும்.

சிதம்பரம்-1, ஸ்ரீவித்யா காளிதாஸ்.

### நெஞ்சை அள்ளும் சுவை

◆ 'நெஞ்சை அள்ளும் தஞ்சை' துணுக்குகள் அத்தனையும் சுவையாக இருந்தன!

கும்பகோணம்-1, கே.என். பாலகிருஷ்ணன்.

### சிறப்புக் கடிதம்:

ரூ. 20 பரிசு பெறுகிறது.

### வெட்கம்!

◆ சேலம் இரயில் விபத்தில் இறந்தோரின் எண்ணிக்கை அதிகரிக்க, அதிகரிக்க நஷ்ட ஈட்டுத்தொகையும் அதிகரித்துக் கொண்டே போகிறது! என்னே விந்தை! மனித உயிர்களுக்கு எவ்வளவு பணம் அறிவித்தாலும் ஈடாகாது என்று அரசு அறிந்திருந்தும், விபத்து என்னும் விபரீத செயலை, மறைக்க, பணத்தைப் பயன்படுத்தப் பார்ப்பது கொடுமை! ஒவ்வொரு வருடமும் இரயில்வே பட்ஜெட் சமர்ப்பிக்கப் படும்பொழுதும், அப்படி மேம்படுத்தி விட்டோம், இப்படி மேம்படுத்தி விட்டோம்' என்று பரணிபாடுகிறார்கள்! விஞ்ஞான முன்னேற்றத்தில் எதை மேம்படுத்தி என்ன செய்ய? குறைந்த பட்சம் இரு ரயில்கள் மோதுவதைத் தவிர்க்க முடியவில்லை! வெட்கம்!

திருச்சுழி, சுந்தர்-அழகேசன்.

# தூக்கத்தைக் கெடுத்தீரே!

### கேரள வாழை

◆ வண்ணம் மாறிய வாழை - கேரளாவில் பல வீடுகளில் உண்டு. வெளிநாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வந்த செடி என்றும், பெயர் ஹெலிகோனியா என்றும், அதைக் கண்டு பிடித்தவர் பெயர் ஹெலிபோன் என்றும் என் திருவனந்தபுரம் சகோதரர் தனது வீட்டிலுள்ள இந்தச் செடியைப் பற்றிக் கூறியதை நினைவு கூர்கிறேன். சென்னையில் மிக அபூர்வமாக, சாந்தோம் செயிண்ட் தாமஸ் வீடுதியில் இது உள்ளது.

திருமங்கலக்குடி, சி. சாந்துஉஸ்மானி.

### கதிகலக்கிய தம்பி

◆ எய்ட்ஸின் பயங்கரமே இன்னும் தீர்ந்தபாடில்லை! அதற்குள், எபோலா தொற்று நோயைப் பற்றிப் படித்து, கதி கலங்கிப் போய் விட்டேன், ஒரு கணம்!

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

### I Love You

◆ ஒன்பது வருடங்களுக்கு முந்தைய என் காதல் சமாசாரத்தை மறுபடி அசைபோட வைத்து தூக்கத்தைக் கெடுத்தீரே, நியாயமா?

திருச்சி-20, ச. நாகராஜன்.

### மகிழ்ச்சியில் பங்கு

◆ என்ன ஒரு வேகம்! பரிசிலனை முடிந் ததும் உடனடியாக வாசகரை வரவழைத்து, பரிசினை வழங்கி...! செந்தில்குமார் அவர்களின் மகிழ்ச்சியில் நாங்களும் பங்கு கொள்கிறோம்!

அரக்கோணம், எல். கோபாலகிருஷ்ணன்.

### தராசுக்குத் தெரியாதா?

◆ தி.மு.க.வில் டி.ராஜேந்தர் சேருவதற்கு முன்பும் கூட ஒருதலைராகம், உயிருள்ள வரை உஷா போன்ற படங்களும், விலகிய பின்பும் கூட எங்க வீட்டு வேலன், சம்சார சங்கீதம் ஆகியவைகளும் வெற்றி பெற்றது தராசு அறிந்திருக்கவில்லை என்றே நினைக்கிறேன்!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

### நன்றி

◆ 'பார்த்திபன் கனவு' தொடரை சேகரித்த பின், பைண்ட் செய்ய வசதியாக, முன் பக்க அட்டைக்காக நல்ல படம் தந்ததற்கு நன்றி!

பல்லவன்நகர், எஸ்.எம். அபிதாட்சயா.

### அசத்தல்

◆ ஏலக்காய் தோட்டம் பற்றி இத்தனை விஷயங்களா! அசத்துகிறார் பாலகுமாரன்!

சென்னை-7, வி.சுலோசனா ராகவன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன். முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.



# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை- 600 002.

கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569


கந்தகோட்டம்
ஸ்ரீமுத்துக்குமாரசுவாமி

### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

# 21%

5 வருடங்கள்
ரூ.50,000/-
அதற்கு மேலும்

**PB பாண்டு**

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ. 1.85 மட்டுமே
- விரைந்த சேவை,
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

# பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

சேர்மன்:

**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீகந்தக்கோட்டம்,
சென்னை–600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.



இயக்குநர்கள் குழு

R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

தங்கம் பொங்கும் 15ஆம் ஆண்டில்
வாடிக்கையாளர்கள் வசதியை முன்னிட்டு
விஸ்தரிக்கப்பட்ட ஷோரூமில்
வணிக சேவையைத் தொடர்கிறது





# Balu Jewellers

DIAMOND GOLD SILVER

73, Usman Road, T. Nagar, Madras - 600 017
Ph: 4341812, 4343030, 4341741, 4348217 Fax: 4343377

